# திருநாவுக்கரசர்

தமிழறிஞர் சே. சிவஞானம் பிள்ளை

எழுதியது






சென்னை :

அரோரா அச்சுக்கூடம்

1926

ரெஜிஸ்தர் செய்தது] [விலை 7 அணா

# முன்னுரை

தன் குடைக்கீழ் வாழும் குடிகட்குத் தன்னாலும் தன் பரிசனங்களாலும் பகைவர்களாலும் கள்வராலும் பிற உயிர்களாலும் ஏதும் இடையூறு வாராமற் காப்பவனே உத்தம அரசன் என்று பேரறிவாளர் கூறும் இலக்கணத்திற்கு இலக்கியமாக, நமது ஆங்கில அரசாங்கத்தார் நமது இந்திய நாட்டைச் சீர் பெற ஆண்டு வருவதால் குடிகள் அடைந்துவரும் நன்மைகள் எண்ணிறந்தன என்பது யாவரும் அறிந்ததே. அவர்கள் தம் கீழ்வாழும் குடிகள் கல்வி யறிவால் மேம்பாடு அடையச் செய்யும் முயற்சிகளோ மிகப் பல. சிறுவர்கள் எல்லாம் தவறாமல் பாடசாலையில் வாசிக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்த ஏற்பட்டிருக்கும் சட்டமும் (Compulsory Education Scheme) மேன்மையானதே.

ஆங்கிலக் கல்வி பயின்று மேம்பாடடைய முயலும் நம் மாணவர்கள் தங்கள் தாய்மொழியாகிய தமிழ் மொழியை அறவே புறக்கணிக்கின்றார்கள். அதனால் விளையும் தீமைகள் மிகப்பல என்பது சொல்லாமலே விளங்கும். மேலும் நம் மாணவர்கள் தங்கள் மத சம்பந்தமான விஷயங்களை ஒரு சிறிதும் உணர்ந்துகொள்ளாமலே இருக்கின்றார்கள். இதனால் அவர்கள் மேல் வகுப்பிற்கு வரும்போது அரசாங்கத்தார் உயர்தரப் பரீக்ஷைக்காக ஏற்படுத்தும் புத்தகங்களை வாசித்துணரப் பெரிதும் இடர்ப்படுகின்றார்கள். தமிழ் மொழியை உணர்ந்துகொள்ளவேண்டும் என்னும் அவாவுடையவர்கட்கு எல்லாம் மதசம்பந்தமான விஷயங்கள் தெரிந்தா-

லன்றி தமிழ் மொழியிலுள்ள சிறந்த நூல்களைக் கற்றுணர்தல் முடியாத காரியம். இத்தகைய தீமைகளை எல்லாம் உணர்ந்தே போலும் அரசாங்கத்தாரும் பாடசாலைகளில் மதசம்பந்தமான கல்வி கற்பித்தல் சாலச் சிறந்தது என்னும் அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கின்றார்கள். ஆகலின், நம் சிறுவர்கட்குப் பாடசாலைகளிலேயே மதசம்பந்தமான விஷயங்களைக் கற்பித்தல் அத்தியாவசியமன்றோ ?

மத சம்பந்தமான விஷயங்களைப் போதிப்பதற்குக் கருவியாக இருக்கவேண்டும் என்னும் நோக்கத்துடன் சைவசமயிகள் தம் கண்ணேபோற் கருதும் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தில் விரித்துக் கூறப்பட்டுள்ள திருநாவுக்கரசு நாயனார் புராணம் வசனரூபமாக இந் நூலில் எழுதப்பட்டிருக்கிறது. திருநாவுக்கரசர் சைவ சமயாசாரியர் நால்வருள் ஒருவரும் அறுபான்மும்மை நாயன்மாருள் ஒருவருமாக விளங்குபவர். அவர் சமண சமயம் புக்கிருந்த காலையில் திருவதிகை வீரட்டானேசுரர் சூலைநோய் மடுத்தருளி ஆட்கொண்டனர். பிறகு அவர் சிவாலயங்கள் தோறும் சென்று தமிழ்ப் பாமாலைகள் பாடி சைவசமயிகள் கடைத்தேறும் வண்ணம் அருள்புரிந்த பெருந்தகையார். அவர்பால் நிகழ்ந்த அற்புதங்கள் பல. அக்காலையில் அவர் திருவாய் மலர்ந்தருளிய அற்புதத் தேவாரங்களுட் சில சிறுவர்கட்குப் பயன்படும்வண்ணம் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன.

வெள்ளியம்பல விலாசம்
மயிலாப்பூர்
5-7-26

சே. சிவஞானம்



# திருநாவுக்கரசர்

இடையறாப் பேரன்பு மழைவாரு
    மிணைவிழியு முழவா ரத்தின்
படையறாத் திருக்காமுஞ் சிவபெருமான்
    திருவடிக்கே பதித்த நெஞ்சு
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
    பெருந்தகைதன் ஞானப் பாடற்
றொடையறாச் செவ்வாயுஞ் சிவவேடப்
    பொலிவழகுந் துதித்து வாழ்வாம்.

## திருமுனைப்பாடி நாட்டுச் சிறப்பு

திருவளர்ந் தோங்கும் பரதக் கண்டத்தில் தக்ஷிண பாகமாகிய தமிழ்மொழி வழங்கும் நாட்டின்கண் தமிழ் அணங்கின் மார்பில் இலங்கும் முத்தாரமெனத் திருமுனைப்பாடிநாடு விளங்காநிற்கும். அந்நாட்டில் இயற்கையான் அமைந்த புழுதித்துகளே யன்றி வேறொரு துகளு மில்லாமல் மேம்பட விளங்கும் குடிகள் நிறைந்து வாழும் மாடங்களும், சந்திர மண்டலம் வரையும் நீண்டு

செல்லும் மாண்பினையுடைய கோபுரங்களும் செறிந்த சிறப்புக்கள் நிறைந்த பற்பல ஊர்கள் உள்ளன. குறிஞ்சி நிலப்பொருளாகிய மூங்கில் முத்துக்களையும், முல்லை நிலப்பொருளாகிய புதிய மலர்களையும், அலைகளாகிய கைகளால் முகந்துகொண்டு வந்து, உழவர்களால் உழப்பட்ட மருத நிலங்களில் வீசும் பெண்ணைமாநதி பாய்தலால் அம்முனைப்பாடி நாடு வளத்துடன் பொலியும். வயலின் கால்களிலெல்லாம் வரால் மீன்களும், பக்க இடங்களில் எல்லாம் கதிரையுடைய செந்நெற் பயிர்களும், பரந்த இடங்களில் எல்லாம் கமுக மரங்களும், படைச்சால்களில் எல்லாம் முத்துக்களும், வாவிகளில் எல்லாம் செங்கழுநீர் மலர்களும், மாடங்களில் எல்லாம் அகிற்புகையும், மனைகளில் எல்லாம் விருந்துகளும் சிறந்து விளங்கும். கருவாழையின் பெரிய குலைகள் துதிக்கையோடு கூடிய யானை முகத்தின் வடிவைக் காட்ட, செந்நெற்கதிர்கள் வெற்றிபொருந்திய குதிரைகளின் வடிவைக் காட்ட, நெல்லைச் சுமந்துகொண்டு செல்வான் வரும் பெரிய வண்டிகள் தேரை நிகர்ப்ப, பயிர்த்தொழில் செய்யும் மள்ளர்கள் படை வீரர்போல் விளங்க, வயல்கள் எல்லாம் சாதுரங்கசேனை தங்கியிருக்கும் இடத்தை ஒத்திருந்தன.

## திருவாமூர்ச் சிறப்பு

2. இவ்வாறு பல வளங்களும் நிறையப் பெற்ற திருமுனைப்பாடி நாட்டின்கண் தெய்வ நெறியாகிய சைவ நெறியை வளரச் செய்வதற்கு இடமாயதும், பூமகட்கு உறையுளாய் விளங்குவதுமாய திருவாமூர் என்னும் ஊர் சிறந்து விளங்கும். அவ்வூர் வயல்களில் நீலமலர்-

களும், வீதிகளில் ஊசல்களும், வீடுகளில் அளவுபடாத பெருவளங்களும் நிறைந்திருக்கும்.

## குறுக்கையர் குடி

3. செல்வங்கள் பலவும் குறைவின்றி நிறைந்துள்ள திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில், உயிரினுஞ் சிறந்த ஒழுக்கத்தில் வழுவாத வேளாண் குலத்தில் குறுக்கையர் குடி என்னும் சிறப்பு வாய்ந்த குடி ஒன்று உண்டு. அக் குடியிலே பெருந் தகைமையுடையவரும், இல்லறத்தை நல்லறமாகக் கொண்டு ஒழுகுபவரும், செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பவரும், எங்கும் பரந்த புகழினை யுடையவரும் ஆகிய புகழனார் என்னும் புண்ணியசீலர் ஒருவர் இருந்தனர். அவர் தாம் இல்லறத்தை நடாத்துவதற்கு இன்றியமையாத் துணையாக மாதினியார் என்னுங் கற்புக்கரசியாரை மணஞ் செய்துகொண்டனர். அம் மாதினியார் மணி வயிற்றில் திருமகள் என்று சொல்லும் வனப்பு வாய்ந்த திலகவதியார் என்னும் பெண்மணி பிறந்தனர்.

## திருநாவுக்கரசர் திருஅவதாரம்

4. திலகவதியார் பிறந்து சில யாண்டு கழிந்த பிறகு உலகில் கலைத்துறை ஓங்கவும், அருந்தவத்தோர் நெறி வாழவும்; உலகின்கண் பரசமய இருள் நீங்கிச் சைவம் தழைத்து விளங்கவும் இளங்கதிர்போல் மருள்நீக்கியார் என்னும் புண்ணியப் புதல்வர் திருஅவதாரஞ் செய்தருளினர். மாதினியார் மணிவயிற்றில் மருள்நீக்கியார் உதித்ததற்பின், மன்னியசீர்ப் புகழனார், அவர்க்குச் செயற்பாலனவாகிய சாதகன்மம், நாமகரணம் முதலிய

மங்கலச் சடங்குகளைப் பல்கிளைஞரும் போற்றச் சிறப்புடன் செய்தனர். மருணீக்கியார் இளமைப் பருவங் கடந்தபிறகு அவர் தந்தையாராகிய புகழனார், அவர்க்கு மயிர் நீக்கு மணவினையை மாந்தரெலாம் மகிழ்சிறப்பச் செய்ததற்பின், அளவில் பொருளை யாவரும் கொள்ள வீசிக் கலைபயிலத் தொடங்குவித்தனர். மருள்நீக்கியார், தந்தை தாயர் கழிமகிழ் வெய்தச் செழுங்கலையின் திறங்களெல்லாம் முறைமையிற் பயின்று, மறுவொழிந்த இளம்பிறைபோல் வளர்வாராயினர்.

## திலகவதியாரை மணம்பேசலும் கலிப்பகையார் போர்மேற்சென்று இறத்தலும்

5. இவ்வாறு மருள்நீக்கியார் கலைகள் பயின்று சிறக்குநாளில் அவர் தமக்கையாராகிய திலகவதியாருக்குப் பன்னிரண்டு யாண்டு நிரம்பிற்று. அந்நாளில் வேளாண் குடியிற் பிறந்தவரும், மின்னார் செஞ்சடையண்ணல் மெய்யடிமையில் விருப்புடையவரும், பொன்னாரும் மணி மௌலிப் புரவலன்பால் அருளுடையவரும், ஆண்தகைமைக்கண் அடல் அரியேறு போன்றவரும், பெருவனப்பினை யுடையவருமாகிய கலிப்பகையார் என்பார், புகழனார்பால் மகட்கொள்ளும் காதலினால் அவர் மாட்டுப் பெரியோர் சிலரைச் செலவிட்டனர். அணங்கு போன்ற திலகவதியாரை மணம்பேச வந்தமையை மேலோர்கள் புகழனார்க்கு அறிவிக்க, அவரும் குணம் பேசிக் குலம்பேசித் தம் பைந்தொடியைக் கலிப்பகையார்க்கு மணநேர்ந்தனர். புகழனார் மணமிசைந்ததனைப் பெரியோர் கலிப்பகையார்க்கு அறிவித்தனர். கலிப்பகையார், திலகவதியாரை மணஞ்செய்வதன்முன்,

அரசன், தன்மேற் படை யெடுத்து வந்த வடபுலத்தோர் மீது செல்லும்படி அவரை அனுப்பினன். அவரும் அவ்வினைமேற் சென்றனர். போர்மேற் சென்ற கலிப்பகையார் நெடுங்காலம் அவ்விடத்தில் தங்கும்படி நேர்ந்தது. இஃது இவ்வாறாக, திலகவதியாரைப் பெற்ற பெரும் பாக்கியத்தையுடைய புகழனாரும் மண்ணுலகை நீத்து விண்ணுலகிற் சென்றடைந்தனர். அவர் உயிர் நீப்ப, அவர் மனைவியார் மாதினியாரும், சுற்றத்தாரையும் மக்களையும் துகளாகவே நினைத்துக் கற்புநெறி வழுவாமற் கணவனாருடன் சென்றனர். தந்தையாரும் பயந்த தாயரும் இறந்ததற்பின், திலகவதியாரும் அவர் பின்வந்த மருள்நீக்கியாரும் மனக்கவலையுற்றுப் பெருந் துயரில் அழுந்திக் கிடந்து பிறகு பெருங் கிளைஞர் மனந்தேற்ற ஒருவாறு துயரொழிந்து, பெருவானமடைந்த பெற்றோர்க்குச் செய்கடன்கள் பெருக்கினார். அச்சமயத்தில் மருவார் மேல் மன்னவற்காக மலையப்போன கலிப்பகையார் போர்க்களத்தில் உயிர் கொடுத்து புகழ் கொண்டனர். இவ்வண்ணம் கலிப்பகையார் இறந்துபட்டதனைச் செம்மலர்மேல் திருவனைய திலகவதியார் கேள்வியுற்று, ‘எந்தையும் எம்மனையும் எனை அவர்க்கே கொடுக்க இசைந்தார்கள் ; அந்த முறைமையினால் இந்த உயிர் அவர்க்கே உரியது ; ஆதலினால், இந்த உயிரை அவர் உயிரோடு இசைவிப்பன்’ எனத் துணிந்தனர். அதனைக் கேட்ட மருள்நீக்கியார் அவர் அடியிணைமேல் வீழ்ந்து மிகப் புலம்பி, ‘அன்னையையும் அத்தனையும் அகன்றதன் பின் உம்மை வணங்கப் பெறுதலினால் நான் உயிர் தரித்தேன். நீர் என்னையினித் தனியாகக் கைவிட்டு ஏகுவீரெனில் யானுமுன்னம் உயிர்நீப்பேன்’ என மொழிந்து, இடரின் அழுந்தினர். அப்பொழுது

தம் தம்பியார் உயிர் வாழவேண்டும் எனத் தம்மனத் துதித்த தயையானது திலகவதியாரை உம்பர் உலகு அணை வுறுவகை விலக்கிட அதனால் பொன்மணி நூல் தாங்காது தம் உயிரையும் அனைத்துயிர்க்கும் அருளை-யுமே தாங்கி மனையிலிருந்து தவம் புரிவாராயினர்.

## திருநாவுக்கரசர் சமண்சமயஞ் சார்தல்

6. தம் தமக்கையார் உயிர் துறவாது இருத்தலை நோக்கிய மருள்நீக்கியார் மனத்துய ரொழிந்து 'நீரிற் குமிழி இளமை, நிறைசெல்வம் நீரிற்சுருட்டு நெடுந்திரை-கள், நீரில் எழுத்தாகும் யாக்கை' என்னும் உண்மை-யைக் கடைப்பிடித்துத் தம்மாட்டுள்ள பொருள்களை எல்லாம் அறநெறியிற் செலவிடுவாராயினர். அறச்சாலை களும் தண்ணீர்ப் பந்தர்களும் அமைத்தனர்; சோலைகள் வைப்பித்தனர்; குளங்கள் தோண்டுவித்தனர்; தம்பால் அடைந்த விருந்தினர்களை உபசரித்து மகிழச் செய்த-னர். புலவர்கட்கு வேண்டுவன நல்கினர். மருள் நீக்கி-யார் உலக வாழ்க்கையினது நிலையாமையைக் கண்டு உணர்ந்து இல்வாழ்க்கையை மேற்கொள்ளாது ஆன்-மாவை உய்விக்கும் சமயம் யாதென ஆராய்வான் தொடங்கினர். தேவ தேவனாகிய சீகண்ட பரமசிவ-னுடைய திருவருள் கூட்டாமையின் மருள்நீக்கியார் மருள் நீங்காமல் கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகினர். பாடலிபுத்திரம் என்னும் பதியை அணைந்து சமணர்கள் வாழும் பாழியை அடைந்து அவர் குழாத்துட் சேர, சமணர்கள் எல்லோரும் அவர் வரவை அன்புடன் ஏற்று, முத்தியை அடைதற்குரிய வழி அமண் சமயமே என்று போதித்தனர். மருள்நீக்கி-

யார் அமண் சமயத்துள்ள எல்லா நூல்களையும் நன்குணர்ந்து அச்சமய உணர்ச்சியில் யாவர்க்கும் மேலானவர் என்னும் நன்கு மதிப்பையும் 'தருமசேனர்' என்னும் பெயரையும் எய்தினர். அமண் சமய உணர்ச்சியில் சிறந்தவராகிய தருமசேனர் தேரராகிய புத்தரையும் வாதில் வென்று அமணர்கள் பாராட்ட மேம்பட்டுச் சிறந்து விளங்கினர்.

## திலகவதியார் திருத்தொண்டின் திறம்

7. மருள்நீக்கியார் அமண் சமயத்தில் மேம்பாடடைந்து விளங்க, திலகவதியார் பாசப்பிணிப்பு ஒழியவும் பிஞ்ஞகன்பால் ஆராத அன்பு பெறவும் நீரார் கெடில வடகரையிலுள்ள திருவதிகை வீரட்டானத்தைச் சார்ந்தனர். சார்ந்தவர் சிவ சின்னந் தாங்கித் திருவீரட்டானத்து அமர்ந்த செம்பவளக் குன்றை அடி பணிந்து தங்கையால் பல திருப்பணிகள் செய்யத் தொடங்கினர். புலரியில் எழுந்து, புனலில் மூழ்கி, புனித வெண்ணீறு அணிந்து, திருக்கோயிலில் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், நந்தன வனத்துட் புக்கு மலர் கொய்து மாலைகள் தொடுத்தல் முதலிய திருத்தொண்டு பலவும் செய்திருப்பாராயினர்.

## திருவதிகைவீரட்டர் திருநாவுக்கரையரைச் சூலைநோய் மடுத்து ஆட்கொள்ளல்

8. திருவதிகை வீரட்டானஞ் சென்று சிவ சின்னந் தாங்கித் திருக்கோயிலில் திருப்பணிகள் செய்துவரும் திலகவதியார், தம் பின் பிறந்த மருணீக்கியார் தீவினைவயத்தால் பரசமயஞ் சார்ந்து ஒழுகுவதனல் மனக்கவலை யுற்று இடருழந்தனர். மனக்கவலை யடைந்த

தூண்டு தவவிளக்கனையார் சுடரொளியாகிய வீரட்டா-னேசுரரைத் தொழுது 'என்னை யாண்டருளுவீராகில் அடியேன் பின்போந்தவனைத் தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும் அவமொன்று பரசமயக் குழியினின்றும் எடுத்தருளவேண்டும்' எனப் பலமுறை-யும் விண்ணப்பஞ் செய்தனர். வினை தீர்க்கும் பரமர் திலகவதியார் கனவின்கண் எழுந்தருளி, 'உன்னுடன் பிறந்தான் முன்னமே முனியாகி எனையடையத் தவ முயன்றான். உன் மனக்கவலையை இனி ஒழிக. அன்ன-வனைச் சூலைமடுத்து ஆள்வம்' என்று திருவாய்மலர்ந்து திருவுருக் கரந்தனர். வீரட்டானேசுரர் அருளியவண்-ணம் தருமசேனர் வயிற்றில் வடவனலும், கொடுவிட-மும், வச்சிரமும் போல் கொடிய சூலைநோய் புகுந்து குடைதலுற்றது. அதனால் அவர் மிகவருந்தி பள்ளி-யின்கண் மூர்ச்சித்து வீழ்ந்தனர். அச் சமயத்தில், அவர், தாம் பயின்று வந்த விச்சைகளால் அதனைத் தடுக்க முயன்றும் பயன்படாது மேன்மேலும் முடுகி வேதனை அதிகரித்திட நச்சரவின் விடம் தலைக்-கொண்டாலென மயங்கி வீழ்ந்தனர். தம் தலைவராகிய தருமசேனர் சூலையால் வருந்தி வீழ்ந்திடக் கண்ட அம-ணர் பலரும் ஒருங்கு கூடி, 'இந்தச் சூலைநோய்போல் கொடியதொரு நோய் யாம் முன்பு கண்டோ மில்லை; இனி இதற்கு யாது செய்வம்' என்று வருந்தி, தம் குண்டிகை நீரை மந்திரித்துக் குடிப்பித்தனர். அதனால் சூலை நோய் தணியாமையால், தம் கையிலுள்ள பீலி கொண்டு காலளவுந் தடவினார்கள். அதனாலும் நோய் தணிந்தபா-டில்லை ; அதிகரிக்கத் தலைப்பட்டது. அதனைக் கண்ட சமணர்கள் 'ஐயோ, இதற்கு நாம் யாது செய்வோம் ! இந் நோய் நம்பாற் போக்கரிது' என்று புகன்று, மனங்

கலங்கித் தருமசேனரைக் கைவிட்டு அகன்றனர். சமணர்கள் சூலைநோயை அகற்றமுடியாது கைவிட்டு அகன்றமையும், நோய் மேன்மேலும் முடுகுவதையும் கண்ட தருமசேனர்க்குத் தன் தமக்கையாராகிய திலகவதியாரைப் பற்றிய நினைப்பு வர, அவரிடத்தில் தனக்கு நேர்ந்த நோயை உணர்த்தும்படி தம்முடைய பாகுகனை அனுப்பினர். அப் பாகுகன் திருவதிகையை அடைந்து அருந் தபோதனியாராகிய திலகவதியாரை நந்தனவனத்தினின்றும் வெளியேவரும் சமயத்தில் கண்டு வணங்கி, 'யான் உம் இளையவர் ஏவலினுல் இங்கு வந்தேன்' எனப் புகன்றனன். அதைக் கேட்ட திலகவதியார் 'அவனுக்கு ஏதேனும் தீங்குளதோ?' என வினவினர். அதற்குப் பாகுகன், 'கொல்லாது சூலைநோய் குடர்முடக்கித் தீராமையால் எல்லாருங் கைவிட்டார். இது செயல் என் முன்பிறந்த நல்லார்பாற் சென்று இயம்பி, நான் உய்யும்படி கேட்டு, இங்கு அணைவாய் என்று எனைச் செலவிட்டனர்' என்று அறிவித்தனன். அதுகேட்ட திலகவதியார், 'யான் அங்கு உன் உடன் போந்து அமண் பள்ளியை அணுகிடேன், நீ சென்று இதனை அவனுக்கு உணர்த்துக' என்றனர். பாகுகன் மீண்டு தருமசேனரிடஞ் சென்று திலகவதியார் மொழிந்ததனைத் தெரிவித்தனன்.

9. தமக்கையார் சொல்லி விடுத்ததைச் செவிமடுத்த தருமசேனர், 'இதற்கு யான் யாது செய்வேன்!' என அயர்ந்து, திருவருள் கூட்டுதலால், 'ஒவ்வாத இப் புன்சமயத்து ஒழியாத இத் துயரொழிய, சைவ நன்னெறியில் நிற்கும் திலகவதியார் தாள் சேர்வேன்' என்று கருதினவராய்த் தாம் உடுத்திய பாயும், கையிற்

கொண்ட குண்டிகையும், பீலியும் ஒழித்து, வெள்ளிய
உடையை உடுத்து, யாவரும் காணாதவண்ணம் புறப்-
பட்டுத் திருவதிகையை அடைந்து, தம்மை வருத்துஞ்
சூலைநோயுடன், திலகவதியார் இருந்த திருமடத்தைக்
குறுகினர். மடத்துட் புகுந்து திலகவதியாரை நோக்கி,
'நமது குலஞ் செய்த நற்றவத்தின் பயன் அனையீர்,
இந்தக் கொடுஞ்சூலைக்கு இடைந்து அடைந்தேன். இனி
மயங்காது உய்ந்து கரை ஏறும் நெறியை உரைத்தரு-
ளும்' என்று உரைத்து, அடிமேலுற வணங்கினர் தரும
சேனர். இவ்வாறு தாளிணைமேல் விழுந்து அயரும்
தம்பியார் தமை நோக்கித் திலகவதியார் ஆளுடைய நம்-
பெருமான் அடியார்கட்கு இரங்கி யருளும் தன்மையை
நினைந்து வணங்கி, 'அறியாது பரசமயக் குழியில்
விழுந்து அருந்துயர் உழந்தீர் எழுந்திரீர்' என மொழிந்-
தனர். மருள்நீக்கியார் சூலைநோயுடன் நடுங்கி எழுந்து
அஞ்சலி செய்தனர். திலகவதியார் தம்பியை நோக்கி,
'இச்சூலைநோய் உமக்கு வந்து எய்தியது கற்றைவேணியர்
அருளேகாண், கழல் அடைந்தோர் பற்றறுப்பார்தமைப்
பணிந்து பணி செய்வீர்' என்று பணித்தனர். உடனே
மருள்நீக்கியார் அவர் பணித்ததனைச் சிரமேற்கொண்டு
இறைஞ்சி நின்றனர். திலகவதியார் இறைவன் திரு
வருளினை நினைந்து அஞ்செழுத்தை ஓதி, திருநீற்றைக்
கொடுத்திட மருள்நீக்கியார் அதனை ஏற்று அணிந்து-
கொண்டனர்.

10. திலகவதியார் திருப்பள்ளி எழுச்சியிலே திரு-
வலகும் திருமெழுக்கும், தோண்டியும் எடுத்துக்-
கொண்டு ஆறணிந்தார் கோயிலினுள் தன் தம்பி மருள்-
நீக்கியாரையும் அழைத்துச் சென்றனர். திருக்கோயி-

Temple of Siva

லுட் புகுந்த மருள்நீக்கியார் திருக்கெடில வீரட்டானத்திருந்த செங்கனகவரைச்சிலையார் பெருங்கோயிலைத் தொழுது, வலங்கொண்டு இறைஞ்சித், தரையின்மிசை வீழ்ந்து, தம்பிரான் திருவருளால் தமிழ் மாலைகள் சாத்தும் உணர்ச்சி பெற்றனர். தமிழ் மாலை சாத்தும் உணர்வு கைவரவே, திருநீற்றால் நிறைந்த கோலமும், நிறைந்த அன்பு மிக்க நெஞ்சமும் உடையாராய், மாற்றார்புரம் மாற்றிய வேதியராகிய அதிகை வீரட்டானேசுவரரைத் தம்மை வருத்தும் பிணியொடு மாயையினையும் நீக்கவேண்டிக் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்னும் திருப்பதிகத்தைத் திருவாய்மலர்ந்தருளினர்.

கூற்றாயின வாறுவி லக்ககிலீர்
கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பகலும்
பிரியாது வணங்குவ னெப்பொழுதுந்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
குடரோடு தொடக்கி முடக்கியிட
ஆற்றே னடியே னதிகைக்கெடில
வீரட்டானத் துறையம் மானே.

போர்த்தாயங்கோ ரானையி னீருரிதோல்
புறங்காடரங் காநட மாடவல்லாய்
ஆர்த்தார்அரக் கன்றனை மால்வரைக்கீழ்
அடர்த்திட்டருள் செய்த வதுகருதாய்
வேர்த்தும்புரண் டும்விழுந்தும் எழுந்தா
லென்வேதனை யான விலக்கியிடாய்
ஆர்த்தார்புனல் சூழ்அதி கைக்கெடில
வீரட்டானத் துறையம் மானே.

இவ்வாறு திருப்பதிகம் பாடியபின், வயிறு உற்றிடு சூலை நோய் அகன்றது. பரம்பொருளின் திருவருள் பெற்ற

மருள்நீக்கியார் முதல்வன் கருணைக்கடலில் மூழ்கித் திருமேனி முழுவதும் மயிர்க்கூச் செறிய கண்கள் ஆனந்த பாஷ்பஞ் சொரிய, நிலத்தில் விழுந்து புரண்டு எழுந்து, 'சமண்சமயப் படுகுழியில் அழுந்தி எழுமாறு அறியாது மயங்கிய பாவியேன், மலைமகள் மணாளன் மலர்க்கழல் அடையும் பெருவாழ்வு பெறச் செய்த இச் சூலை நோயினுக்கு யாது கைம்மாறு செய்யவல்லேன்' என்றனர். மருள்நீக்கியார் இவ்வாறு எல்லாம் வல்ல இறைவனது பெருங் கருணைத் திறத்தினை நினைந்து தொழுது கொண்டாடுங்காலையில், வீரட்டம் அமர்ந்த பிரான், 'நீ அற்புத சின்மய மதுரமாகிய தேவாரப் பதிகத்தினைப் பாடினமையின், உனக்கு நாவுக்கரசு என்னும் பெயர் இனி எழுலகத்திலும் மன்னுக' என்று யாவரும் வியப்புற ஆகாயத்தின்கண் அசரீரியால் திருவுளம் பற்றினர். சிவபரஞ்சுடர் அசரீரியாகத் திருவருள் பாலிப்ப திருநாவுக்கரசர், 'இங்நெடு நாள் தம்மை மறந்து சமண்சமயம் புக்குப் பிழை செய்த அடியேனுக்கு எம்பெருமான் அருளுந் திறன் இதுவோ ?' என்று இறைவன் கருணைத் திறத்தை வியந்து கொண்டாடி, அத்தன்மையனான இராவணனுக்கு அருளிய திறத்தைத் துதித்தலையே மேற்கொண்டனர். இவ்வாறு திருநாவுக்கரையர் சமண்சமயம் பொய் மார்க்கம் என்பது யாவர்க்கும் புலனாகும் வண்ணம் சைவ சமயத்திற் பிரவேசித்து இறைவன் திருவருள் பெற்றமையின் 'உலகம் உய்ந்தது, உய்ந்தது' என்று உரைத்துத் திருவதிகையின்கண் வாழும் சிவனடியார்கள் அனைவரும் களிப்புற்றனர். திருநாவுக்கரையர் திரிகரண சுத்தியாய் திருத்தொண்டு செய்து கிடப்பதே உத்தமமான காரியம் என்று உணர்ந்து, அத்தொண்டு செய்வதற்கு எழுந்த ஆர்வ

மேலிட்டால் சிவசின்னந்தாங்கி, தியானமறாத உணர்வும், ஈறின்றி எழுந் திருவாசகமும், கையிற்றிகழும் உழவாரப் படையுடன் தொண்டு பூண்டு ஒழுகுவாராயினர். திலகவதியார் தம் தம்பியாரைச் சூலை நோயால் சமணப் படுகுழியினின்றும் எடுத்து ஆண்டருளிய எம்பெருமான் திருவருட்டிறத்தினை வியந்து கொண்டாடி, 'ஒன்றுக்கும் பற்றாத எனது வேண்டுகோளையும் முற்றுவித்தனரே' என மகிழ்ந்து அப்பெருமானை வணங்கி அத்திருவதிகை வீரட்டானத்தின்கண்ணேயே அமர்ந்திருந்தனர்.

## திருநாவுக்கரையரைத் துன்புறுத்தச் சமணர் செய்த சூழ்ச்சி

11. இவர் செய்கை இவ்வாறாக, பாடலிபுரத்திலிருந்த அமணர்கள் யாவரும் ஒருங்குகூடி 'மருள்நீக்கியாராகிய தருமசேனர் தமக்கு நேர்ந்த சூலை நோய் நம் சமயத்தவர் ஒருவராலும் ஒழிந்திடாமையின் சமண சமயத்தைவிட்டுச் சைவராய்ப் பிணியொழிந்து உய்ந்தனர். இதனால் நமது சமயம் வீழ்ந்தது. இதனை வேந்தன் அறிந்திடில் வெகுண்டு சைவனாகி நம் விருத்தியும் தவிர்த்து விடுவான். நாம் இனி என் செய்வது' என்று சிந்திக்கலாயினர். பிறகு, 'தமது தவ்வை சைவத்து நிற்றலின் தருமசேனரும் சூலை தீர்ந்திலது எனப் பொய் வகுத்துப் போய் நமது தெய்வத்தையும் சமயத்தையும் நிந்தனை செய்தனர்' என்று சொல்வதே தக்கது, எனத் தெளிந்தனர். அடிகள்மார் எல்லாரும் ஒன்று கூடி, பல்லவ ராஜனிடத்திற் சென்று, தங்கள் வருகையை அரசனுக்கு அறிவிக்குமாறு காவலாளரிடத்திற் சொல்ல, அவரும் அரசனுக்கு அதனை அறிவித்தனர். அரசன்

அவர்களைக் கடிது அணையுமாறு உரைத்தனன். கடைக்காவலர் அரசவை புகுதவிட அடைந்த அடிகளும், 'அரசே, தருமசேனர் பிணியுற்றவர்போல நடித்து, சடையானுக்கு ஆளாய், நின் சமயம் அடித்தனர்' என்றனர்.

12. அடிகள்மார் புகன்றவைகளைக் கேட்ட பல்லவன் வெகுண்டு, 'புரைபில் தவத்தீர், தருமசேனர் பொய்ப்பிணி கொண்டு, நமது உரை சிறந்த சமயத்தை அழித்து ஒழியப் பெறுவதே, இதனுக்கு என் செய்வது?' என்று கனன்றனன். அரசன் கனன்று உரைத்ததனைக் கேட்ட, பொய் ஒழுகும் அமண்குண்டர், 'தலை நெறியாகிய சமயந் தன்னை அழித்து நின்னுடைய நிலைநின்ற தொல்வரம்பின் நெறியழித்த பொறியிலியை அலைபுரிவாய்' என அஞ்சாது உரைத்தனர். அதனைக் கேட்ட மன்னவன், மந்திரிகள் தம்மை நோக்கி, 'தீயோனைச் செறுதற்கு என்பாற் கொண்டு வருக' எனப் புகன்றனன். அரசன் தலைநின்ற அமைச்சர்களும் அப்பொழுதே புறப்பட்டுத் திருவதிகையை அடைந்து பரசமயப் பற்றறுத்த பான்மையினராகிய திருநாவுக்கரசர்பாற் சென்று, 'நும்மை அழைத்து வர அரசன் இன்று எம்மை விடுத்தனன்' என்று விண்ணப்பஞ் செய்தனர். அதனைக் கேட்ட நிறை தவத்தினர், 'நாமார்க்குங் குடியல்லோம்' என்னுந் திருத்தாண்டகத்தால் நான்மறையின் கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைப் பாடி 'நாம் நீங்கள் அழைத்தபடி வரக்கடவேம் அல்லேம்' என்று மறுமாற்றஞ் செய்தனர்.

நாமார்க்குங் குடியல்லோ நமனை யஞ்சோ
நரகத்தி லிடர்ப்படோ நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோ
மின்பமே யெந்நாளுந் துன்ப மில்லை

தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்று மீளா வாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.

நாவார நம்பனையே பாடப் பெற்றோ
நாணற்றார் நள்ளாமே விள்ளப்பெற்றோம்
ஆவாவென் றெமையாள்வா னமரர்நாத
னயனொடுமாற் கறிவரிய வனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் தென்திசைக்கோன் தானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலுங்
குணமாகக் கொள்ளோமெண் குணத்துளோமே.

திருநாவுக்கரையர் இவ்வாறு திருப்பதிகம் பாடி மறு மாற்றஞ் செய்ததனைக் கேட்ட மந்திரி முதலியோர் மீட்டும் அவரை வணங்கிப் பிரார்த்தித்திட, திருநாவுக்கரசர் 'ஈண்டு வரும் வினைகளுக்கு எம்பிரான் உளன்' என்று இசைந்து அவர்களுடன் சென்றனர். அவர்களும் திருநாவுக்கரசரின் வருகையைப் பல்லவ ராஜனுக்கு அறிவித்தனர்.

## திருநாவுக்கரசரை நீற்றறையிலிடல்

13. திருநாவுக்கரசர் வந்ததைக் கேட்ட பல்லவன் பாங்கிலிருந்த அமணரை நோக்கி, 'இவனை யாது செய்வது ? சொல்லுங்கள்' என்று கேட்டனன். அதனைக் கேட்ட அறந்துறந்து அறிவிழந்த புல்லறிவோர் நீற்றறையி லிடப் புகன்றனர். அது கேட்ட பெருகு சினக் கொடுங்கோலான் அருகணைந்தார்தமை நோக்கி, 'அவ்வண்ணஞ்செய்க' என்றனன். ஏவலர்கள் பெருந் தகையை உருகு பெருந் தழல் வெம்மை நீற்றறையின் உள்ளிருத்-

திக் கருந்தாட்கொளுவி சேமங்கள் செய்துவைத்தனர். திருநாவுக்கரசர் அந் நீற்றறையினுள் அணைந்தபொழுது அம்பலத்துத் தாண்டவம் புரிந்தருளும் தாள் நிழலைத் தலைக்கொண்டு, 'ஈசன் அடியார்க்கு வருந்துயர் உளவோ" என்றெண்ணி முதல்வனையே தொழுது இருந்தனர். வெய்ய திருநீற் றறையானது இளவேனிற் பருவத்துத் தண்ணிய தென்றலால் வருடப் பெற்ற தண் கழுநீர்த் தடமும், வீணைகானமும், வெண்ணிலவும், சிவபெருமான் திருவடி நீழலும் போலக் குளிர்ந்து இருந்தது. திருநாவுக்கரசர் பேச இனியானைப் பிஞ்ஞகனை, ஈசனை, எவ்வுயிருந் தருவானை, ஆசையிலா வாரமுதை அடி வணங்கித் திருநீற்றறையுள் தீங்கு ஒன்றும் இன்றி அமர்ந்திருந்தனர்.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே.

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே.

எனத் திருப்பதிகம் பாடி திருநாவுக்கரசர் யாதொரு தீங்கு மின்றி நீற்றறையி லிருக்கப் பல்லவன் எழு நாள் கழிந்த பிறகு, 'இனி நீற்றறையைப் பாரும்' என்று உரைத்தனன். இருட்குழாம் போலும் அமணர் நீற்றறையைத் திறந்து பார்த்தபோது, ஆனந்த வெள்ளத்தினிடை மூழ்கி, அம்பலவர் தேனுந்து மலர்ப்பாதத்து அமுதுண்டு, தெளிவெய்தி ஊனந்தா னிலராகி உவந்திருந்தார்தமைக் கண்டு அதிசயம் அடைந்தனர்.

## திருநாவுக்கரசரை நஞ்சுண்பித்தல்

14. திருநாவுக்கரசர் நீற்றறையில் ஊனம் சிறிதும் இல்லாதிருந்தமையைக் கண்ட சமணர் பல்லவனிடத்திற் சென்று, 'அரசே, தருமசேனன் நமது சமயத்தில் இருந்தபோது உணர்ந்துகொண்ட மந்திர சக்தியினுல் வேகாமற் பிழைத்துக்கொண்டனன். இனி அவனுக்கு விடம் ஊட்ட வேண்டும்' என்று பகர்ந்தனர். அரசனும், 'அவ்வாறே செய்க' என்ற அளவில் கொடிய அமணர் திருநாவுக்கரசரைத் தீய விடப் பாலடிசில் அமுதுசெயப் பண்ணினுர். திருநாவுக்கரசரும் 'நஞ்சை அமுதாகக் கொண்ட நாதன் அடியவர்கட்கு, நஞ்சும் அமுதாம்' என்று நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்டு யாதொரு ஊனமும் இன்றி விளங்கினர். பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்குப் புவனங்கள் முடிவாக்கும் துயர் நீங்க ஆலகால விடம் அமுத மாயின் அவன் அடியார்க்கு நஞ்சு அமுதமாவது அற்புதமோ ? சமணர்கள் கொடுத்த விடத்தை ஆண்டவரசு அமுது செய்து யாதொரு தீங்கும் இன்றி இருந்ததைக் கண்ட அமணர்கள் அதனைக் கண்டு, 'இவனுக்கு நஞ்சு அமுதமாயிற்று. இவ்விடத்தில் இவன் பிழைப்பா னுகில் நமக்கெல்லாம் நாசம் உண்டாகும்' என்று பயந்து, தங்கள் அரசனிடத்திற் சென்று, 'நாம் நஞ்சைக் கலந்து சோற்றிலே உண்பித்தும் அவன் நம்முடைய சமயநூல்களிலே கற்றுக்கொண்ட மந்திர வலியினுலே பிழைத்துவிட்டனன். அவன் இறவா திருப்பின் 'எங்கள் உயிரும், உமது அரசாட்சியும்' அழிவது திண்ணம்' என்றனர்.

## திருநாவுக்கரசரை யானையால் இடறச் செய்தல்

15. சமணர்கள் மொழிந்ததைக் கேட்ட மதிகெட்ட மன்னவனும் 'அவனைக் கடியுந் திறம் எவ்வாறு? செப்-

புங்கள்' என்னச் சமணரும், 'நின் கொற்ற வயக்களிறு கொண்டு இடறுவதே தக்கது' என்று கூறினர். மாபாவிக் கடை அமணர், 'வாகீசத் திருவடியாம் காபாலி அடிய வர்பால் களிற்றை விடுக' என்னப் பூபாலர் செயல் மேற்கொள் புலைத்தொழிலோன், அவர் தம்மேற் கோபாதி சயமான கொலைக்களிற்றை விடச் சொன்னான். ஒரு விறல் வேழம், தான் வாழும் கூடத்தைக் குத்தி, ஒரு குன்றமெனப் புறப்பட்டு, மாடத்தை மறித்திட்டு, மண்டபங்கள் எடுத்து எற்றி, தாடத்தில் பரிக்காரர் தலையிடறி, கடகளிற்றின் வேடத்தால் வரும் கூற்றென வந்தது. காலின்கண் கட்டிய பாசத் தொடையினையும் நிகளத் தொடரினையும் பறித்துத் தறி முறித்து, ஊசற்கரம் எதிர் சுற்றிட ஊறி மதவெற்பு திருநாவுக்-கரசர் எதிரே வந்தது. அண்ணல் அருந்தவ வேந்தர், யானை தம்மேல் வரக்கண்டு, விண்ணவர்தம் பெருமானை விடையேறும் வித்தகனை, 'சுண்ணவெண் சந்தனச் சாந்து' என்னுந் திருப்பதிகத்தால் பாடித் துதித்துப் பாசுரந்தோறும் ஈற்றில், 'கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர் நாம் அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை' என்று தோத்திரம் செய்தனர்.

சுண்ண வெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளாமணியும்
வண்ணவுரிவை யுடையும் வளரும் பவளநிறமும்
அண்ணலாண் முரணேறும் அகலம் வளாயவரவுந்
திண்ணன் கெடிலப் புனலும் உடையாரொருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்று மில்லை அஞ்சவருவதுமில்லை.

நாம் பெழுகைகள் பிடித்து நங்கை நடுங்கமலையை
உரங்களெல்லாங் கொண்டெடுத்தான் ஒன்பது மொன்று மலற

வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் [சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலு முடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்று மில்லை அஞ்சவருவதுமில்லை.

திருநாவுக்கரசர் இவ்வாறு தம்பெருமானைத் துதித்துப் பதிகம் பாடிய அளவில் வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிறு, தண்டமிழ் மாலைகள் பாடித் தம்பெருமானைச் சரணாகக் கொண்ட அன்புறு தொண்டரை வலமாகச் சூழ்ந்து வந்து எதிர் தாழ்ந்து, எண்டிசையோர்களும் காண, இறைஞ்சி எழுந்தது. ஆண்டவரசை வணங்கி அஞ்சிய அவ் வேழத்தைக் கண்ட பாகர் மீண்டும் அதனை அவர்மேல் மிறை செய்து காட்டிட, வேழம் அவர் தங்களையே கொன்று அமணர்மேல் எதிர்ந்து ஓடியது. ஓடி, அருகர்கள் தம்மை உழறி மிதித்துப் பிளந்து பலரையும் நாடிக் கொன்று நகரைக் கலக்கி அம் மன்னற்கு ஆகுலம் விளைத்தது. யானையிற் பிழைத்த அமணர்கள் எல்லாம் மானமிழந்து மதிமயங்கி, வருந்திய சிந்தையராகி, மன்னன் தாளில் வீழ்ந்து புலம்பினர். வேந்தன் வெகுண்டு, 'இனிச் செய்வது என்?' என்றனன். சமணர்கள், 'நங்கள் சமயத்தில் நின்று நாடிய முட்டி நிலையால் எங்கள் எதிரேறு அழிய யானையால் இவ் வண்ணம் நின் கீர்த்தியைப் பங்கப்படுத்தினன். இவன் இறந்துபடினல்லது உன் துன்பம் ஒழியாது' என்றனர். அவ்வாறாயின், 'இனி இவனைச் செய்வது என்?' என்று அரசன் வினவிட, 'கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுவதே ஏற்றதாகும்' எனக் கூறினர் அமண்குரவர்.

## திருநாவுக்கரசரைக் கடலுட் பாய்ச்சுதல்

16. அமணர்கள் 'திருநாவுக்கரசரைக் கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுக' என்றதைக் கேட்ட மன்னவன் தீவினைமாக்களை நோக்கி, 'நம்மவர்க்குத் தீங்கிழைத்த இவனைச் சேமமுறக் கொண்டு போய்க் கல்லில் அணைத்துப் பாசம் பிணித்து ஒரு படகில் ஏற்றிச் சென்று வேலையில் வீழ்த்துமின்' என்றனன். அரசன் சொல்வழி நின்ற அப்பதகரும் திருநாவுக்கரசரைப் படகில் ஏற்றிச் சென்று அவன் சொன்ன வினையை முடித்து அகன்றனர். கடல் புக்க மெய்த்தொண்டர், 'எப் பரிசாயினும் ஆகுக, எந்தையை ஏத்துவன்' என்று, சிவன் அஞ்செழுத்தைத் துதிப்பாராய், 'சொற்றுணை வேதியன்' என்னுந் திருப்பதிகத்தைத் திருவாய்மலர்ந்தருளினர்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்து
ஏத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே.

திருநாவுக்கரசர் இவ்வாறு எம்பெருமானைத் துதித்துத் திருப்பதிகம் பாடிய அளவில் அவரைப் பிணித்திருந்த பெருங்கல்லும் அரசு மேற்கொள்ளத் தெப்பமாய் மிதந்தது. அமணர்கள் பூட்டிய கயிறும் துணிபட்டது. மெய்ப்பெருந்தொண்டர் அக்கல்லின்மேல் விளங்கித்

தோன்றினர். அப்போது வருணன் கல்லையே சிவிகையாகச் சுமந்து வந்து திருப்பாதிரிப்புலியூரின் பாங்கரில் சேர்ப்பித்தனன். நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளாகிய கயிற்றினாலே, ஆணவம், மாயை, காமியம் என்னும் மூன்று கற்களிலே அநாதியே கட்டுண்டு உழலும் ஆன்மாக்கள், எழுவகைப் பிறப்பாகிய எழுகடலினின்றும் உய்ந்து கரையேற அருளும் அஞ்செழுத்து நமது வாகீசப் பெருந்தகையாரை, ஒரு கல்லில் ஒரு கயிற்றினால் கட்டி ஒரு கடலில் இடப்பட்ட துன்பத்தினின்றும் உய்ந்து கரையேறச் செய்ததும் அற்புதமாமோ ? அத் திருப்பதியின்கண் உள்ள தொண்டர்கள் எல்லாம் அரகர என்னும் ஓசையுடன் திருநாவுக்கரசரை எதிர்கொண்டனர். தம்மை எதிர்கொண்ட தொண்டர்களுடன் திருநாவுக்கரசர் திருப்பாதிரிப்புலியூரில் திங்கள் வெண்கொழுந் தணிந்த செஞ்சடையாரை வழிபட்டு, 'ஈன்றாளுமாய் எனக்கெந்தையுமாய்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடி, அங்கேயே சிலகாலம் தங்கியிருந்தனர்.

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
என்றா னிமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே.

திருந்தா வமணர்தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன் வரைஎடுத்த
பொருந்தா வரக்கன் உடல்நெரித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தா யடியே னினிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே.

## திருநாவுக்கரசர் திருவதிகைக்கு மீண்டும் அணைதல்

17. திருப்பாதிரிப்புலியூரின்கண் தங்கியிருந்த வாகீசப் பெருமானுக்குத் தன்னை முதலில் சமணப் படுகுழியினின்றும் எடுத்தாண்ட திருவதிகை வீரட்டானேசுரரைத் தரிசிக்கும் பெருங் காதல் எழுந்தது. திருவதிகைக்குச் செல்பவர் தேவர்பிரான் அமர்ந்த திருமாணிகுழியும் திருத்திணைநகரும் மேவினர். மேவி, சொன்மலர் கொண்டு இறைஞ்சித் திருக்கெடிலத்தைக் கடந்து அணைந்தனர். வெஞ்சமண் குண்டர்கள் செய்த தீய மிறைகள் எல்லாம் வென்று ஏறிய இன்றமிழீசர் எழுந்தருள்வதைக் கேட்ட திருவதிகைப்பதி வாணரெலாம் தஞ்செயல் பொங்கத் தழங்கொலி மங்கலஞ் சாற்றினர். மணிநெடுந் தோரணம், வண்குலைப்பூகம், மடற்கதலி இணையுற நாட்டி, எழுநிலைக் கோபுரம் தெற்றி எங்கும் பெருகொளித் தாமங்கள் நாற்றிச் செஞ்சாந்து நீவி, அணிநகர்தன்னை அலங்கரித்தனர். மன்னிய அன்பின் வளநகர் மாந்தரும், வயங்கு இழையாரும் இன்னிய நாதமும் ஏழிசை ஓசையும் எங்கும் விம்மப் பொன்னியல் சுண்ணமும் பூவும் பொரிகளும் எங்கும் தூவி, தொன்னகரின் புறஞ் சூழ்ந்து தொண்டரை எதிர் கொண்டனர். தூய வெண்ணீறு துதைந்த திருமேனியும், தாழ்வடமும் நாயகன் சேவடி தைவரு சிந்தையும், நைந்துருகிப் பாய்வதுபோல் அன்புநீர் பொழிகண்ணும், பதிகச் செஞ்சொன்மேய செவ்வாயும் உடைய நாவுக்கரசர், அதிகைப்பதியின் வீதியினுள்ளே புகுந்தனர். கண்டவர் அனைவரும் கைகள் தலைமேற் குவித்து, ‘இந்தக் கருணைக்கடலைக் கண்களாற் கண்டுவைத்தும்

அமண்கையர் இப் பெருந்தகையார்க்குத் தீங்கு விளைக்கச் செற்றம் உண்டாயினவண்ணம் எவ்வண்ணம்?' என்று உரைத்தார்கள். பின்னும் தொண்டரை ஆண்டு கொண்ட திரிபுரந் தீயெழச் செற்ற வேதியனைத் தொழுது துதித்தனர். ஏனைப் பலமாக்கள் இவ்வண்ணமாக இன்னும் பல இயம்பி ஏத்த, தொண்டர் குழாங்கள் திரண்டு செல்ல வாகீசர் திருவீரட்டானத்தைச் சேர்ந்தனர். கோயிலுட் புக்க பெருந்தகையார் அன்பின் நயப்புறு காதலினாற்றிளைத்து, உம்பர்தங்கோனை, உடைய பிரானை இறைஞ்சி, 'ஏழையேனான் பண்டிகழ்ந்தவாறே' என்னும் ஈற்றடியினை யுடைய 'வெறி விறவு கூவிளநற் றொங்கலானை' என்னும் ஏழைத் திருத்தாண்டகத்தினை எடுத்தியம்பி வாழ்ந்தனர்.

வெறிவிரவு கூவிளநற் றொங்க லானை
வீரட்டத் தானைவெள் ளேற்றி னானைப்
பொறியரவி னானைப்புள் ளூர்தி யானைப்
பொன்னிறத்தி னானைப் புகழ்தக் கானை
அறிதற் கரியசீ ரம்மான் றன்னை
யதியரைய மங்கை யமர்ந்தான் தன்னை
எறிகெடிலத் தானை இறைவன் றன்னை
ஏழையே னான்பண்டு இகழ்ந்த வாறே.

## பல்லவச் சோழன் சைவ சமயம் சார்தல்

18. அரியயனுக் கரியானும், அடியவருக் கெளியானுமாகிய திருவதிகைவீரட்டானத் தமுதைத் திருநாவுக்கரசர் பரிவுறு செந்தமிழ் பாடித் திருத்தொண்டு செய்துகொண்டு திருவதிகைப்பதியின் கண்ணே எழுந்தருளியிருந்தனர். சமணர்கள் பொருட்டுத் திருநாவுக்-

கரையருக்குப் பொல்லாங்கு புரிந்த புல்லறிவின் பல்லவ மன்னனும் பழவினைப் பாசம் அகல, நல்லறிவு தலைப்பட அமண் சமயத்தைக் கைவிட்டு அதிகையை அடைந்து ஆண்ட அரசினைப் பணிந்து மழவிடையோன் தாள் வழி பட்டுச் சைவ னாயினன். சமணர் மொழி பொய்யென்றுணர்ந்த பல்லவனும் பாடலி புரத்திருந்த அமண் பள்ளியையும், பாழிகளையும் இடித்துக் குணதரவீச்சரம் என்னும் சிவாலயம் எடுத்தனன்.

## சிவபெருமான் திருநாவுக்கரையருக்கு திருவிலச்சினை பொறித்தல்

19. வாகீசத் தவமுனிவர் உழவாரத் திருத்தொண்டு செய்து, தமிழ்ப் பாமாலைகள் பாடி, திருவதிகை வீரட்டத்தில் அமர்ந்தருளுநாளில் பன்னகம் அணிந்த பிரான் பதி பலவுஞ் சென்று இறைஞ்சித் தமிழ்மாலை புனைந்து, தொண்டு செய்யும் விருப்பம் அதிகப்பட திருவதிகையினின்றும் புறப்பட்டு திருவெண்ணெய் நல்லூர் திருக்கோவலூர் முதலிய பதிபிறவும் வணங்கித் தமிழ்பாடிப் பெரு விருப்புடன் விடையார் மகி ழ்பெண்ணாகடம் அடைந்தனர். அந்தணர் வாழும் அச் செழும்பதியினகத்தெய்தி, வார்சடையார் மன்னும் திருத்தூங்கானை மாடத்தைப் பணிந்து ஏத்திப் பரவினார் பார்பரவுந் தவமுனிவர். எப்பொருட்கும் ஆதியும் அந்தமுமாகி நின்றவனும், உமையொரு பாகங் கொண்டவனுமாகிய சங்கரனைப், 'புன்னெறியாம் அமண் சமயத் தொடக்குண்டு போந்த இந்த உடல் தன்னுடனே உயிர் வாழத் தரியேன். நான் தரிப்பதனுக்கு என்னுடைய நாயக நின் இலச்சினையிட்டருள்' என்று, 'பொன்னார் திருவடிக்

கொன்றுண்டு விண்ணப்பம்' என்னுஞ் செந்தமிழ்ப் பாமாலையைத் திருவாய் மலர்ந்தருளினர் திருநாவுக்கரசர்.

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு
விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண்
டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென்
மேற் பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை
மாடச் சுடர்க்கொழுந்தே.

கடவுந் திகிரி கடவா
தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத்
தாய்பனி மால் வரைபோ
விடபம் பொறித்தென்னை யேன்றுகொள்
ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவும் கடந்தையுள் தூங்கானை
மாடத்தெங் தத்துவனே.

வாகீசர் இவ்வாறு பதிகம்பாடிய அளவில் அடியார் எண்ணிய எண்ணியாங்கே அருள் செயவல்ல ஆடகமேருச்சிலையார் அருளால் ஒரு சிவ பூதம் மாடொருவர் அறியாமே வாகீசர் திருத்தோளில் சூலமும், சினவிடையும் சாத்திச் சென்றது. திருநாவுக்கரசர் தம் திருத்தோளிலார்ந்த திருவிலச்சினையைக் கண்டு மனமகிழ்ந்து தம் பெருமான் அருள் நினைந்து கண்கள் ஆனந்த அருவி பொழியத் தொழுது விழுந்து ஆர்வத்தால் ஓங்கிய சிந்தையராகி உய்ந்தேன் என்று எழுந்தனர்.

## திருநாவுக்கரசர் சிதம்பர தரிசனஞ் செய்தல்

20. வாகீசர் தூங்கானை மாடத்திற் சுடர்க் கொழுந்தின் அடி பரவிப் பாங்காகத் திருத்தொண்டு பயின்று அங்கே அமரும் நாளில் திருவரத்துறையும், திருமுதுகுன்றமும் பணிந்து, தமிழ் மென் மலர் மாலைகள் புனைந்தேத்திக் குணதிசை வழியாய் நிவாக்கரை கடந்து, அம்பலத்தே ஆடுகின்றார் அடி வணங்கி ஊனாலும், உயிராலும் உள்ள பயன் கொள நினைந்து, திருப்புலியூர் மருங்கணைந்தனர். புலியூர்க்கு அருகே போந்த திருநாவுக்கரசர் இருவர்க்கு அரியவர் நடமாடிய திருப்பதியின் எல்லையை அடைந்த அளவிலேயே, மெய் தல்முறத் தொழுது எழுந்து, மயில்கள் நடிக்கின்ற தாமரை மலர்ந்த தடாகங்கள் நிரம்பிய மருத நிலத்தின் வழியே வந்தனர். தாமரை மலர்கள் தங்கிய நீர்நிலைகளி னிடத்தே முதுமேதிகள் மலர்களை மேயாநின்றன; பணையினருகே கண்டோர் மூங்கிலே என்று ஐயுறும் வண்ணம் கரும்புகள் ஓங்கி வளர்ந்தன; பெரியோராகிய வாகீசப் பெருமானது வடிவைக் கண்டு அன்பால் உருகி ஆனந்தக் கண்ணீர் பொழிவதைப்போலக் கரும்புகள் கணுக்களினின்றும் முத்தம் சொரிந்து நின்றன. பிறகு வாகீசர் நந்தன வனத்தைக் குறுகிட, அவ்வனத்திலுள்ள மரங்களில் வாழும் குயில்கள், 'பிறவிப் பிணியை அகற்றுதற்கு எண்ணமுடையீர், அறிவிற் பெரியவராகிய அப்பர் இங்கு வந்திருக்கின்றனர், அவரை அடுத்து உங்கள் பிணியினீங்குதற்கு இங்கு வம்மின்' என அழைப்பது போலக் கூவின. திருநாவுக்கரசர் திருத்தில்லையுட் புகுந்து வீதியை முறைப்படி பணிந்து எழுநிலைக் கோபுரத்தை வணங்கி கனகசபையைத் தலைப்-

பட்ட உடனே, கைகள் தலைமிசை அஞ்சலி புனைந்திடக் கண்கள் மழை போல ஒழியாது பெய்யுந் தகையனவாகக், கரணங்களும் உடன் உருகும் பரிவினை மேவ, பேறு எய்தும் மெய்யும் தரைமிசை விழும் முன்பு எழுதா, மின் தாழ் சடையொடு நின்றாடும் ஐயன் திருநடம் எதிர் கும்பிடும் நாவுக்கரையருடைய ஆர்வம் பெருகுதல் அளவிலவாயிற்று. வாகீசர் இத் தன்மையராய்ப் பல முறையுந் தொழுது எழுந்து, 'என்று வந்தாய்' என்னும் திருக்குறிப்போடு நடனஞ் செய்கின்ற நடராஜப்பெருமானுடைய திருவருட் டிறத்தினை உணர்ந்தமை தோன்ற, 'அத்தா உன் ஆடல் காண்பான் அடியனேன் வந்தவாறே' என முடிந்த திருப்பதிகம் பாடிப் போற்றிக் கைத் தொண்டு செய்யுங் காதலிற் பணிந்து போந்து திருமுன்றிலி னிடத்தும், தோணி திருவீதியுள்ளும் உழவாரப் பணிவிடை செய்து அத் தில்லையம் பதியின்கண் சிலநாள் தங்கியிருந்தனர்.

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரமயோகி
எத்தினாற் பத்தி செய்கே னென்னைநீ யிகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடு கின்ற
வத்தாவுன் னாடல் காண்பா னடியனேன் வந்த வாறே.

மண்ணுண்ட மாலவனு மலர்மிசை மன்னி னாலும்
விண்ணுண்ட திருவுருவம் விரும்பினார் காண மாட்டார்
திண்ணுண்ட திருவே மிக்க தில்லைச்சிற் றம்பலத்தே
பண்ணுண்ட பாட லோடும் பரமநீ யாடு மாறே.

இவ்வாறு பணி செய்து திருத்தில்லையில் மேவு நாளில், திருநாவுக்கரசர் திருவேட்களத்துச் சென்று சேவுயர் கோடியார் தம்மை வணங்கிப் பாடித் திருக்கழிப்பாலை

தன்னை நண்ணினர். வாகீசர் திருக்கழிப்பாலையிலிருக்கும்போது திருப்புலியூரை நினைந்து கழிப்பாலையை நீங்கிச் சிதம்பரத்தைச் சார்ந்தனர். புலியூரைச்சார்ந்த திருநாவுக்கரையர், 'அரியானை அந்தணர்தம் சிந்தையானை' என்னும் தாண்டகச் செந்தமிழ் பாடி, பொன்னம்பலத்து மேவி ஆடல்புரியா நின்றவர் தம்மைப் பணிந்து, பின்னும் தமிழால் போற்றல் செய்து அத்திருப்பதியின்கண் அமர்ந்தருளினர்.

அரியானை யந்தணர் தஞ்சிந்தை யானை
  யருமறையி னகத்தானை யணுவை யார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
  திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
  கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
  பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
  கடிக்கமலத் திருந்தயனுங் காணா வண்ணஞ்
சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
  திகழொளியைச் சிந்தனை மயக்கந் தீர்க்கும்
ஏரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணும்
  ஏழுலகுங் கடந்தண்டத் தப்பால்நின்ற
பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
  பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

## திருஞானசம்பந்தப்பெருமானை சந்தித்தல்

21. திருநாவுக்கரசர் திருப்பணி செய்துகொண்டு புலியூரில் அமர்ந்திருக்கு நாளில், கடையுகத்தில் ஆழியின்மேல் மிதந்த தோணிபுரத்தின்கண் அமர்ந்த செங்-

கண் விடை யுகைத்தார் திருவருளால் வெற்பரையன் மடப்பாவை திருமுலைப் பாலோடும் சிவம் பெருகி வளர் ஞானம் குழைத்து ஊட்ட அமுது செய்து அப்பொழுதே ஆழிவிடம் உண்டவரை, 'இவன் எம்மான்' எனக்காட்டி ஏழிசை வண்தமிழ் மாலை இயம்ப வல்ல காழி வரும் பெருந்தகை சீரினை அடியார்கள் உரைப்பக் கேட்டு அவர் மலர்க் கழல்கள் வணங்குதற்குப் பெருங்காதல் கொண்டனர். உடனே அம்பலத்துள் ஆடுகின்ற கழல் வணங்கி அருள்பெற்றுப் பொய்ப்பிறவிப் பிணியோட்டும் திருவீதி புரண்டு வலங் கொண்டு போந்து எப் புவனங்களும் நிறைந்த அத் திருப்பதியின் எல்லையினை இறைஞ்சி ஏத்தித் திருநாரையூர் பணிந்து பாடிச் சென்றனர். தொண்டர் குழாம் புடை சூழத் தொழுத கரத்தொடு திருநீறு துதைந்த கோலமும் கண்டவர்தம் மனங் கசிந்து கரைந்து உருகும் கருணையும் புறம் பொழிந்து காட்டத் தெண் திரைவாய்க் கல் மிதப்பில் உகைத்து ஏறும் திருநாவுக்கரசர் வண்தமிழால் மறை மொழிந்த பிரான் அவதரித்த திருப்புகலி மருங்கே சார்ந்தனர். நீண்ட வரைவில்லியார் வெஞ்சூலை மடுத்தருளி நேரே முன்னாண்ட அரசர் எழுந்தருள்கின்றார் என்பதைக் கேட்ட ஆளுடைய பிள்ளையாரும் பெரு விருப்பு மிக்க திருவுள்ளக் கருத்தினோடும் அன்பர் புடை சூழ எழுந்தருளி முன்னே வந்தனர்.

22. ஆளுடைய பிள்ளையார் தம்மை நோக்கி வருவதைக் கண்ட ஆளுடைய அரசர் அஞ்சலி குவித்த கரத்தினராய் சம்பந்தப் பெருமானைப் புடை சூழ்ந்திருக்கும் அடியவர் குழாத்துட் சென்று புகலி காவ-

ீட புகால் அவுக்ககம் செய் ...

= ஆளுடைய.

லரைப் பெருங் காதலுடன் அடி பணிந்தனர். ஆளு-டைய பிள்ளையாரும் பணிந்த அரசினை மலர்க் கரங்க-ளால் பற்றி எடுத்திறைஞ்சித் தம் புனிதவாக்கால் 'அப்பரே' என்று அழைக்க ஆளுடைய அரசும், 'அடி-யேன்' என்றனர். இருவரையும் சூழ்ந்து வந்த சிவ-னடியார் உலகமெல்லாம் சிவம் பெருகும் ஒலி நிறைத்-தனர். ஆளுடைய அரசர் பிள்ளையார் கழல் வணங்கப் பெற்றேன் என்று உவந்தனர். ஞான வள்ளலார் வாகீ-சர் தமைக் காணப் பெற்றமைக்குப் பெருமகிழ்ச்சி பொங்கினர். உலகிற்கெல்லாம் அருட்பெருகு தனிக்-கடலும், உலகுக்கெல்லாம் அன்பு நிறை கடலும், பொங்கும் பொருட் சமய முதற் சைவ நெறி தான் பெற்ற புண்ணியக் கண் இரண்டும், புவனம் உய்ய இருட் குடுவுண்டவர் அருளும், அகில மெல்லாம் ஈன்றவள் தன் திருவருளும் தம்மிற் கூடிச் சென்ற தொப்பத் தெருட்கலை ஞானக் கன்றும் அரசும் திருக்கழுமலத்தில் எழுந்தருளியிருக்கும் செஞ்சடை வானவர் கோயில் சேர்ந்தனர். ஆளுடைய பிள்ளையாரும், அரசும் பாமர் திருக்கோபுரத்தைப் பணிந்து உள்புக்கு, இறைவன் எழுந்தருளியிருக்கும் விமானந் தன்னை வலங்கொண்டு தொழுது விழுந்து எழுந்தனர். சண்பைவரு ஞானப்-பிள்ளையார் அப்பரை நோக்கி, 'உங்கள் தம்பிரானரை நீர் பாடும்' என்றனர். அரசும் திருத்தோணிபுரத் திறை-வரைக் கசிந்து பாடினர். வாகீசர் பெரிய பெருமாட்டி-யுடன் தோணிமீது வீற்றிருந்தருளும் பிரான்முன் நின்று திருப்பதிகம் பாடி, அரியவகை புறம் போந்து ஞானசம்பந்தப் பிள்ளையார்தம் திருமடத்தில் எழுந்-தருளி, திருவமுது செய்து, பல நாள் காழியம் பதியின்-கண் வைகினர்.

23. வாகீசப் பெருந்தகையார் ஞானசம்பந்தப் பெருமான் திருமடத்தில் எழுந்தருளி ஆளுடைய பிள்ளையாருடன் அளவளாவி மகிழ்வுற்றிருக்கு நாளில், சோழ நாட்டின்கண் உள்ள சிவ தலங்களைத் தரிசிக்க வேண்டும் என்னும் பெருவிருப்பு அவருக்கு உண்டாயிற்று. இவ் விருப்பத்தைக் காழிப் பிள்ளையாருக்குக் குறிப்பித்தனர். அவரும் அதற்கு நேர்ந்தனர். பிறகு ஆண்ட அரசும், ஆளுடைய பிள்ளையாரும் திருக்கோலக்காவிற்குச் சென்று காளகண்டனை இறைஞ்சி மீண்டனர். பிறகு வாகீசர் பொன்னி நதியின் இரு மருங்கிலும் உள்ள சிவதலங்களைப் பணிந்து திருச்சத்திமுற்றம் என்னும் பதியைச் சார்ந்து அங்கே திருக்கோயில் கொண்டருளி யிருக்கும் சிவக்கொழுந்தை இறைஞ்சி, திருப்பணிகள் செய்து, 'பூவார் அடிச் சுவடு என்றலைமேல் பொறித்து வை' என்று பாடியிரந்தனர்.

கோவாய் முடுகியடுதிறற் கூற்றங் குமைப்பதன் முன்
பூவாரடிச் சுவடென்மேற் பொறித்து வைபோக விடின்
மூவா முழுப்பழி மூடுங்கண்டாய் முழங்குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே.

பொறித்தோரக்கன்பொருப்பெடுப்புற்றவன்பொன்முடிதோள்
இறத்தாளொரு விரலூன்றிட்டலற விரங்கி யொள்வாள் [ய்
குறித்தேகொடுத்தாய் கொடியேன் செய்குற்றக்கொடுவினைநோ
செறுத்தாய் திருச்சத்தி முற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே.

இவ்வாறு பாடிக் குறை யிரந்ததைச் செவிசாய்த்த அடியார் வேண்டியவைகளை மறுதுகொடுக்கும் வள்ளலாம் சிவபரஞ்சுடரும், 'நல்லூரில் வா' என்றே அருள் செய்தனர்.

## வாகீசருக்குச் சிவபெருமான் திருவடி சூட்டுதல்

24. திருத்தாண்டக வேந்தர் சத்திமுற்றத்தின்கண் எழுந்தருளியிருக்கும் சிவக்கொழுந்தின் ஆணையின்படி திருநல்லூருக்குச் சென்று இறைவனை வணங்கி மகிழ்ந்து எழுந்தனர். நல்லூ ரெம்பெருமானும், 'உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்' என்று வாகீசப் பெருந்தகைதன் சென்னிமிசைப்பாதமலர் சூட்டினார். திருவடி சூட்டும் பெருவாழ்வைப் பெற்ற அப்பர், இறைவன் திருவருளை, 'நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்' என்னும் திருத்தாண்டகத்தால் போற்றிசைத்துப் புனிதன் அருள் நினைந்து உருகி, 'விழுந்து எழுந்து, அழியாததனம் பெரிதும் பெற்று உவந்த வறியோன்போல் மனந்தழைத்து நின்றனர்.

நினைந்துருகு மடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைக ணீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் றளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
வினமலர்கள் போதவிழ்ந்து மதுவாய் பில்கி
னனைந்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே.

குலங்கிளரும் வருதிரைக ளேழும் வைத்தார்
குருமணிசேர் மலைவைத்தார் மலையைக் கையால்
உலங்கிளர வெடுத்தவன்றோள் முடியு நோவ
ஒருவிரலா லுறவைத்தார் இறைவா வென்று
புலம்புதலு மருளொடு போர்வாளும் வைத்தார்
புகழ்வைத்தார் புரிந்தாளக் கொள்ள வைத்தார்
நலங்கிளருந் திருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே.

இவ்வாறு பதிகம் பாடி வாகீசர் அந்நல்லூரிலேயே திருப்பணிகள் புரிந்துகொண்டு சிலநாள் தங்கி யிருந்தனர்.

## அராத் தீண்டிய பிள்ளையை உயிர்ப்பித்தல்

25. சிலநாட் சென்றபிறகு திருநாவுக்கரசர் திருநல்லூரினின்றும் நீங்கி, திருப்பழனம் முதலிய தலங்களைக் கண்டு இறைஞ்சி, திங்களூர் என்னும் திருப்பதியை அடைந்தனர். அத்திங்களூரில் வாழும் அந்தணர் குலத்தில் மேம்பட்ட அப்பூதியடிகள் என்னும் பெருந்தகையார் தம்முடைய குமாரர்கட்கும் அறச்சாலை, தண்ணீர்ப்பந்தல் முதலியவைகட்கும் திருநாவுக்கரசு என்னும் பெயர் வைத்திருப்பதை உணர்ந்த ஆளுடைய அரசர் அவரைக் காணும் பெரு விருப்புடன் அவர் மனைக்கு எழுந்தருளினர். திருநாவுக்கரசர் எழுந்தருளக் கண்ட அப்பூதியடிகள், தம் மனைவி மக்களோடும் சென்று வணங்கி உபசரித்து அவரைத் தம் மனையில் திருவமுது செய்யும்படி வேண்டினர். வாகீசப் பெருந்தகையும் அவர் வேண்டுகோட்கு இணங்கினர். அப்பூதியடிகள் வாகீசர் திருவமுது செய்திட இயந்தமைக்குப் பெருமகிழ் வெய்தித் தம் மனைவிக் குணர்த்த, அவ் வம்மையார் ஆம்படி திருவமுது அமைத்து, தம் மூத்தகுமாரனைத் தோட்டத்திற் சென்று வாழை இளங் குருத்து அரிந்துவரக் கட்டளை யிட்டனர். கட்டளையை ஏற்ற மூத்த திருநாவுக்கரசு விரைந்து சென்று பூங்கதலிக் குருத்தை அரியப் புகுமளவில், ஒரு நாகம் அவரைத் தீண்டிற்று. அவர் அதைப் பாராட்டாது விரைந்து ஓடிவந்து கதலிக் குருத்தைத் தாயர் கரத்தில் நீட்டித் தளர்ந்து வீழ்ந்து இறந்து பட்டனர்.

அது கண்டு அப்பூதியடிகளும் அவர் மனைவியாரும், ‘இவன் இறந்தமை உணரின் தூயவர் இங்கே திருவமுது செய்யாரே’ எனத் துயராமுற்று, சவத்தினை மறைத்து வைத்தனர். இவ்வாறு தம் புதல்வன் சவத்தை மறைத்து வைத்து, மனத் தடுமாற்றம் சிறிதும் இன்றித் திருநாவுக்கரசர்பாற் சென்று, ‘எம்பெருமானே அமுது செய்ய எழுந்தருள வேண்டும்’ என்று வேண்டினர். அவர்களின் உளத் தடுமாற்றத்தை நம்பர் திருவருளினல் அறிந்த வாகீசப் பெருந்தகையார், அவர்கள் அங்கு நிகழ்ந்தவைகளை மறைத்துத் தம்மைத் திருவமுது செய்திட அழைத்ததனுக்கு அளவிறந்த அருள் சுரந்து சவத்தைச் சிவாலயத்தின் முன் கொணர்வித்து, ‘ஒன்று கொலாம்’ என்னும் திருப்பதிகத்தினைப் பாடி யருளினர்.

ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவ ரூர்வது தானே

பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்றலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே

இவ்வாறு வாகீசர் திருப்பதிகம் பாடிய அளவில் அப்புதல்வர் விடம் நீங்கி உணர்வு பெற்றெழுந்தனர். தம் அருமந்தமகன் உயிர் பெற்றெழுந்ததற்கு மகிழ்வெய்தாமல் அருந்தவர் அமுது செயத் தாழ்த்ததனுக்காக அப்பூதியடிகள் வருந்தினர் ; பிறகு வாகீசர் அவர்மனை புகுந்து விருந்தமுது செய்தருளி, விருப்பினுடன் அங்கே தங்கியிருந்தனர்.

## திருவாரூருக்குச் செல்லுதல்

26. சிலநாள் கழித்து ஆளுடைய அரசு திங்களூரினின்றும் மீண்டும் திருப்பழனப்பதி புகுந்து பெருங்காதலுடன் தம் பெருமான் கழல் சார்ந்து அன்பொடு பணிந்து பாமாலை சாத்தி அப்பதியின்கண் அமர்ந்திருந்தனர். திருப்பழனத்தின்கண் வீற்றிருக்கும் நம்பெருமான் மீது சாத்தும் பாமாலைகளில் அப்பூதியடிகளின் திருத்தொண்டை, 'அப்பூதி குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியாய்' என்று சிறப்பித்தருளினர். வாகீசர் அத் திருப்பழனத்தின்கண் தங்கியிருக்கும் போதே அப் பதிக்கு அயலில் உள்ள திருச்சோற்றுத்துறை முதலிய தலங்களைப் பாடி மீண்டு செழும்பழனத் திறை கோயில் திருத்தொண்டு செய்திருந்தனர். அப்பர் சால நாள் அங்கே தங்கியிருந்து, தம் தலை மேல் தாள் வைத்த ஆலமார் மணிமிடற்றூர் சேவடியை நினைந்து மீண்டும் திருநல்லூரை யடைந்தனர். திருநல்லூரை யடைந்து நம்பெருமான் அடி வணங்கி ஆராதெழுந்த அன்பில் திளைத்துப் பணிசெய்து இருக்கு நாளில் விரிஞ்சனெடுசெங்கண்மால் அறிவரியார் மேவிய திருவாரூர் தொழ நினைந்தனர். திருநல்லூரை அரிதினீங்கி திருப்பழையாறை, திருவலஞ்சுழி முதலிய தலங்களைச் சென்றிறைஞ்சித் திருவாரூர் சென்று அடைந்தனர். கல்லே மிதப்பாகப் போந்தவராய திருநாவுக்கரசர் திருவாரூரை நோக்கி வருகின்றூர் என்பதை உணர்ந்த சிவனடியார்கள் அவரை எதிர்கொண்டழைத்து உபசரித்தனர். அவரும் தொண்டருடன் தோரணவாயிலை நண்ணித் தேவாசிரியனை இறைஞ்சித் திருமாளிகை வாயில் புகுந்து புற்றிடங் கொண்ட பெருமானைக் கண்டு

தொழுது, கரசரணுதியங்கங்கள் எல்லாம் புளகங்களாக எழுந்து அன்புகூரக் கண்கள் மாரிபொழியத் திருமூலட்டானரைப் போற்றித் திருத்தாண்டகம் பாடியருளினூர். பதிகம் பாடித்துதித்து உருகி மணிக்கோயில் வலஞ் செய்து இறைஞ்சி, அன்பு பூண்ட மனத்தோடு திருவாயிற்புறத் தணைந்தனர். தேவாசிரியனை யடைந்து பழமொழித் திருப்பதிகம் பாடியருளினர். பிறகு மார்பாரப்பொழி கண்ணீர் மழை வாரும் திருவடிவும், மதுர வாக்கில் சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின் மாலைகளும், இறைவன் செம்பொற்ருளே சார்வான திருமனமும் உடையவ ராகிய திருநாவுக்கரசர் திருவாரூரின்கண் உள்ள திருவீதிகளில் உழவாரப் பணி செய்து பணிந்து ஏத்திப் பரவிச் செல்வா ராயினர். திருவாரூரின்கண் புற்றிடங்கொள் நிருத்தர்தமை காலங்களில் அன்பொடு கும்பிட்டுப் பல பதிகங்கள் பாடி யிருக்கு நாளில் திருவலிவலம், கன்ருப்பூர். முதலிய பற்பல தலங்களைத் தரிசித்துத் திருவாரூருக்கு மீண்டனர். திருவாதிரை நாளில் வீதிவிடங்கப் பெருமான் பவனி வரும் கோலத்தைக் கண்டு மகிழ்வெய்தினர். அங்கே இருக்குநாளில் திருப்புகலூர் அமர்ந்தருளும் சிவபெருமான் சேவடிகள் கும்பிடும் வேட்கை கூர அப்பர் ஒருவாறு திருவாரூரைத் தொழுது அகன்று, பொருப்பரையன் மடப்பாவை இடப் பாகர் பதி பிறவும் பணிந்து திருப்புகலூரை நோக்கி வருவாராயினர்.

## திருப்புகலூர் முதலிய தலங்கட்குச் செல்லல்

27. அப்போது ஆளுடைய பிள்ளையார், பன்னுகப்பூண் அணிவார் பயின்ற பதிபலவும் பணிந்து, திருப்-

புகலூரை வந்து இறைஞ்சி, முருகனர் திருமடத்தில் மேவினர். ஆண்ட அரசு திருப்புகலூருக்கு எழுந்தருளுவதைக் கேட்ட காழியர்கோன், தொண்டர் குழாம் புடை சூழ எழுந்தருளி, எதிர்கொண்டனர். ஆளுடைய பிள்ளையார் தம்மை எதிர்கொள்ள வருவதைக் கேட்ட வாகீசர், திருநீற்றுத் தொண்டர் குழாம் புடை சூழ மகிழ்ந்து வந்தனர். திருநாவுக்கரசர் எதிர்சென்றிறைஞ்ச சிரபுரத்துப் பிள்ளையார் எதிர்வணங்கி, 'அப்பரே நீர் வருநாளில் திருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீர்' என்று கூறினர். வாகீசரும், 'தென்திருவாரூர் நகராளும் ம்மைத்தழை கண்டர் ஆதிரைநாளின் மகிழ் செல்வம் இத்தகைமைத்து என்று என்மொழிகேன்' என்று 'முத்து விதான மணிப் பொற்கவரி' என்னும் திருப்பதிகத்தினை மொழிந்தனர். திருவாரூர் வீதிவிடங்கப் பெருமான் திருவாதிரை நாளில் பவனிவரும் சிறப்பைக் கேட்ட சண்பையர் காவலர், 'தென்திருவாரூர் கும்பிட்டு உம்முடன் வந்திங்கு உடன் அமர்வேன்' என்று அருளிச் செய்து, ஆரூர் நோக்கிச்சென்றனர். வாகீசர் திருப்புகலூரின் கண்ணே தங்கி, நாகப்பூண் அணிவாரைப் பணிந்து திருப்பணி செய்து மகிழ்ந்திருந்தனர். தென்புகலூர் மன்னிய தேனைச் செழுந்தமிழ்மாலை பாடிக் காலந்தோறும் விருப்பிற் கும்பிட்டு வாகீசர் தங்கியிருக்கு நாளில் திருச்செங்காட்டங்குடி திருநள்ளாறு முதலிய பதிகட்குச் சென்று வணங்கி இன்புற்றனர். திருநாவுக்கரசர் திருப்புகலூரில் இருக்கு நாளில் திருவாரூருக்குச் சென்றிருந்த வேணுபுரச் செல்வர் அங்கு நின்று நீங்கித் திருப்புகலூர் மருங்கு வந்தணைந்தனர். பிள்ளையார் வருகையைக் கேட்ட வாகீசர் உள்ளமகிழ்ந்து எதிர்கொண்டழைத்து வந்து முருகநாயனர் திருமடத்-

தில் உடனுறைந்தனர். அந்நாளில் சிறுத்தொண்ட நாயனாரும் திருநீல நக்க நாயனாரும் அங்கு வந்து அவர்களுடன் அளவளாவி இருந்தனர். சண்பை வேந்தரும் வாகீசப் பெருந்தகையும் சிலநாள் திருப்புகலூரிற் றங்கியிருந்த பின்னர் செஞ்சடையண்ணல் மேவுதிருப்பதிகளைக் காண்பதற்கு எழுந்த வேட்கையால் பூம்புகலூரைத்தொழுது அகன்று திருவம்பர்,திருவாக்கூர்முதலிய பதிபல வணங்கி, திருவீழி மிழலையை அடைந்தனர்.

## திருவீழி மிழலையைச் சார்தல்

28. காழி ஞானவள்ளலாரும் திருநாவுக்காசரும் திருவீழி மிழலையை அணைகின்றார் என்ற வார்த்தையைக் கேட்ட அந்நகரின் வாழ்பவர் சிவனடியார்களுடன் கூடி எதிர்கொண்டு வணங்க, அவர்களும் வணங்கி நகருட்புக்கனர். அந்நகரமாந்தர் மாடவீதி அலங்கரித்து மணிவிளக்கு ஏற்றி, நீண்ட கதலியையும் பூகத்தையும் நிரைத்து நிறை பொற்குடம் எடுத்தனர். வாகீசரும் பிள்ளையாரும் விண்ணிழிந்த விமானக் கோயில்வாயில் சென்றணைந்தனர். சென்று திருவீழிமிழலையில் அமர்ந்த செங்கனகக் குன்றவில்லியார் மகிழ்ந்த கோயில் உள்புகுந்து வலம் வந்து, திருமுன்றில் வணங்கி, திருமுன் எய்தி செக்கர்ச்சடை மவுலி வெள்விடையார் சேவடிக்கீழ் விழுந்தனர், எழுந்தனர், விம்மினர். பிறகு கைகள் குவித்துக் கழல் போற்றிக் கலந்த அன்பு கரைந்துருக மெய்யில் வழியுங் கண்ணருவி விரவச் சொன்மாலை பாவிச் சைவம்பெற்ற இருகண் போல்வார் திருவீழி மிழலையில் தங்கியிருந்தனர்.

## படிக்காசு பெறுதல்

29. காழிப் பிள்ளையாரும் திருநாவுக்கரையரும் திருவீழி மிழலையின்கண் எழுந்தருளியிருக்கும் நாளில் மழை சுருங்கிப் பொன்னிநதியும் வரண்டு, உணவுப் பொருள்கள் குறைந்து பஞ்சம் வந்தடைந்தது. உயிர்கள் எல்லாம் இடர் உழந்தன. செய்ய சடையாரும் திருவீழி மிழலையுடையாருமாகிய வீழியழகர் கையில் மானும் மழுவும் காண அவ்விருவர் கனவிலும் எழுந்தருளி, 'கால நிலைமையால் உங்கள் கருத்தில் வாட்டம் அடையீர் எனினும் உம்மை வழிபடுவார்க்கு அளிக்கும் பொருட்டுப் படிக்காசு தருகின்றோம்' என்று உரைத்தருளி விண்ணின்று இழிந்த விமானத்தின் கிழக்குப் பீடத்தினும் மேற்குப் பீடத்தினும் புகலி ஆண்டகையார் தமக்கும் ஆண்ட அரசினுக்கும் நாள்தோறும் படிக்காசு வைத்தருளினர். அல்லார் கண்டத்து அண்டர்பிரானும் மிழலை நாயனார் அருளாற் பெற்ற படிக்காசு பல்லாறியன்றவளம் பெருக்கிற்றாகலின் பரமனடியாரானார்கள் எல்லாம் எய்தி இரண்டு பொழுதும் உண்க எனப் பறை நிகழ்த்தியதே யன்றி சொல்லாற்சாற்றிச் சோறிட்டார். அடியார் எல்லாரும் உண்டு மகிழ்ந்து துயர் கூர் வறுமையினைத் தொலைத்திட்டனர். ஈசராம் மிழலை இறையவரிடத்து ஞான சம்பந்தப் பெருமான் திருமாமகனார் என்னும் முறைமையினால் காசு வாசியுடன் பெற்றனர். வாகீசர் கைத்தொண்டாகும் அடிமையினால் வாசியில்லாக் காசு பெற்று உவந்தனர். ஞான சம்பந்தப் பெருமானும், திருநாவுக்கரசரும் மிழலை ஈசரிடத்துப் படிக்காசு பெற்று அன்பர்கட்குச் சோறிட்டு இன்புற்று, வீழிமிழலையில் இருக்குநாளில் காலந்தவறு

தீர்ந்து மேகம் பொழிய, ஞாலமெல்லாம் குளிர்தூங்கி உணவுப்பொருள்கள் விளைந்தமையால் பஞ்சம்நீங்கிற்று. இவர்கள் இருவரும் நீலகண்டர் உறை பதிகள் வணங்க நினைவுற்றவராய் மிழலை மாமணியை வணங்கிப் பிரியாவிடைகொண்டு திருவாஞ்சியம் முதலிய தலங்களை வணங்கித் திருமறைக் காட்டினை யடைந்தனர்.

## திருமறைக்காட்டில் திருக்கதவந் திறப்பித்தல்

30. திருமறைக்காட்டை யடைந்த இருவரும் மறைக்காடர் மகிழ்ந்துறையும் ஆலயத்துட் புகுந்து வலங்கொண்டு சந்நிதியிற் சென்றூர்கள். அத் திருப்பதியில் வீற்றிருக்கும் அரவச்சடை யந்தணரை, மறைகள் அர்ச்சனை செய்து கதவந் திருக்காப்புச் செய்த அந்நாள்முதல் இந் நாள்வரை அடைபட்டே யிருக்கும் மணிநீள் வாயில் மருங்கு அணைந்தனர். வேதம் அர்ச்சனை செய்து மூடிய அந்நாள்முதல் அக் கதவம் திறக்கப்படாமல் வேறோர் வாயிலிட்டு அதன்வழியே அடியார்கள் உள்ளே செல்கின்றூர்கள் என்பதையும் அறிந்து கொண்டனர். இதனை உணர்ந்த வெங்குரு வேந்தர் திருநாவுக்கரையரைப் பார்த்து, ‘அப்பரே, வேதம் அருச்சனைசெய்த உம்பர்பிரானை உள்புக்குத்தேங்காது இருவோம் இறைஞ்சத் திருமுன் கதவம் திருக்காப்பு நீங்கப் பாடும்’ என்று அருளிச் செய்தனர். அன்பின் மேலீட்டால் ஆளுடைய பிள்ளையார் அருளிச் செய்த கட்டளையை மேற்கொண்டு வாகீசர், மறைக்காட் டுறையும் மணாளனைக் கதவம் திருக்காப்பு நீங்கக் கருணை செய்யுமாறு, ‘பண்ணினேர் மொழியாள் உமைபங்கர்’ என்னுந் திருப்பதிகத்தினைப் பாடி யிரந்தனர்.

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னூர்வலஞ் செய்மறைக் காடரோ
கண்ணி னுலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீர் எம்பெரு மானீரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே.

இவ்வாறு பதிகம் பாடி, திருக்கடைக் காப்புச் செய்த பிறகு, வேதவனத்தின் மெய்ப் பொருளின் அருளால் மறைக் கதவம், காதல் அன்பர் முன்பு திருக்காப்பு நீங்கியது. இவ்வற்புதத்தைக் கண்ணுற்ற அன்பரெலாம் கழிமகிழ் வெய்தினர். ஆண்ட அரசும், சிவக்கன்றும் இன்பவெள்ளத்திடை மூழ்கி எழுந்து உள்புகுந்து தம்பெருமான் முன்பு பணிந்து தமிழ் மொழி மாலைகள் பாடி, என்பு கரைய உள்ளுருகி இறைஞ்சி அரிதிற் புறத்தணைந்தனர். புறம்பே போந்த வாகீசர் ஞான வாரமுதம் உண்ட புகலிக்கவுணியரை நோக்கி, 'இக் கதவம் அடைக்கும்வகை நீரும் பாடி யருளும்' என்று வேண்டினர். சண்பையாளும் தமிழ் விரகர் திருநாவுக்கரசர் மொழிந்த உரையினைக் கொண்டு பதிகம் பாடும் அவ்வளவில், காளகண்டர் அருளினால் எடுத்த திருப் பாட்டிலேயே பொற்கதவம் அடைத்தது. அதனைக் கண்ட ஞானசம்பந்தப்பிள்ளையும், ஆண்டவரசும் மகிழ் வடைந்து தங்கள் திருமடத்திற்குச் சென்று தங்கி யிருந்தனர்.

## திருவாய்மூருக்குப் போதல்

31. வாய்மை திறம்பா வாகீசர் தாம் பாடி அரிதில் திறக்கவும், சம்பந்தப் பிள்ளையார் பாடி எளிதில்

அடைக்கவும் நேர்ந்தமை கருதி, 'நம்பர் திருவுள்ளம் அறியாது அயர்ந்தேன்' எனக் கவன்று பெரிது அஞ்சி திருமடத்தில் ஒரு பாலடைந்து அறிதுயில் கொண்டனர். ஆண்ட அரசர் மறைக்காட்டு மாமணியின் பாதங்களை மனத்தின் உன்னித் துயிலும்பொழுது, உமையோர் பாகம் உடையவர் பொன்னின்மேனி வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவினொடும் போந்து அவர்க்கு, 'வாய்மூரிற் இருப்போம் தொடர வா' என்று அருள் செய்தனர். அப்பமூர்த்திகள் உடனே விழித்து எழுந்து, என்னை, 'வாய்மூரி லிருப்போம் தொடரவா என்றார்; இது என்கொல்' என்று அதிசயித்து, 'எங்கே என்னை இருந்திடந் தேடிக்கொண்டு' என்னும் திருப்பதிகத்தினைத் திருவாய் மலர்ந்தருளி, 'இது எம்பெருமா னருளாகில் யானும் போவேன்' என்று எழுந்து வேதவனத்தை விட்டுப் புறப்பட்டு விரைந்து சென்றனர்.

எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாள மருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா தென்கொலா

தீண்டற் கரிய திருவடி யொன்றினால்
மீண்டற் கும்மிதித் தாராக் கன்றனை
வேண்டிக் கோண்டேன் திருவாய்மூர் விளக்கினைத்
தூண்டிக் கொள்வனா னென்றலுந் தோன்றுமே.

இவ்வாறு திருப்பதிகம் பாடி வாகீசர் செல்ல, அவருக்கு முன்னே சிவபெருமான் தாம் கனவில் காட்டிய திருக்கோலத்துடன் எழுந்தருளிச் சென்றனர். நெடும்பொழுது நீரார் சடையார்பின் சென்ற வாகீசர்

அவரைச் சமீபிக்கப் பெற்றிலர். அணித்தே காட்சி கொடுப்பவர்போல் ஆதிமூர்த்தியும் பொன்னின் கோயில் ஒன்று எதிரே காட்டி அதனுட் புகுந்தருளினர். தொண்டரும் அவ்விடத்து விரைந்து தொடர்ந்தனர். திருநாவுக்கரசர் திருவாய்மூருக்குப் போகின்றனர் என்பதை உணர்ந்த புகலி வள்ளலாரும் அங்கேவந்து சேர்ந்தனர். கனவின்கண் தோன்றி அழைத்துக் கொடுவந்து அணியவர் போல் காட்டி மறைந்தார் வேதவனத்தையர் என்று அயர்ந்து, 'அடியார்களிற் சிறந்த ஞானசம்பந்தப்பெருமான் திருக்கதவம் திறக்கப் பாடவேண்டும் என்பதை அறியாது பிழைத்துத் திறப்பித்தேனுக்கு ஒளிக்கலாம், கதவம் தொண்டு உறைக்கப் பாடி அடைப்பித்த தழைத்த மொழியார் உப்பாலர் அவர்க்கு எங்ஙன் மறைப்பது' என்று புகன்றனர். மாலும், அயனுந்தேடி இன்னுங் காணுதார் மாடநீடு திருப்புகலி மன்னர் அவர்க்கு நேரே காட்சி கொடுத்தருள, புகலி காவலர் ஆடல் கண்டு பணிந்து ஏத்தி அரசும் காணக் காட்டினர். ஆண்ட அரசு பரமனைத் தரிசித்துப் பதிகம் பாடினர்.

பாட வடியார் பரவக் கண்டேன்
பத்தர்கணங் கண்டேன் மொய்த்த பூத
மாடன் முழவ மதிரக் கண்டேன்
அங்கையனல் கண்டேன் கங்கை யாளைக்
கோட லரவார் சடையிற் கண்டேன்
கொக்கினிதழ் கண்டேன் கொன்றை கண்டேன்
வாடற் றலையென்று கையிற் கண்டேன்
வாய்மூரா டிகளைநான் கண்ட வாறே.

கலங்க விருவர்க் கழலாய் நீண்ட
காரணமுங் கண்டேன் கருவாய் நின்று
பலங்க டரித்துகந்த பண்புங் கண்டேன்
பாடலொலி யெலாங் கூடக் கண்டேன்
இலங்கைத் தலைவன் சிரங்கள் பத்தும்
இறுத்தவனுக் கீந்த பெருமை கண்டேன்
வலங்கைத் தலத்து ளனலுங் கண்டேன்
வாய்மூர டிகளைநான் கண்ட வாறே.

வாகீசர் இவ்வாறு திருப்பதிகம் பாடிய பிறகு நாயன்மார் இருவரும் திருவாய்மூரை அடைந்து அங்கே நிலவுங் கோயிலை வலஞ்செய்து, சூடும் பிறையாரைத் தொழுது போற்றித் துதி செய்து, சிலநாள் தங்கியிருந்து மீண்டும் திருமறைக்காட்டினை அடைந்தனர். திருஞான சம்பந்தப் பெருமான் ஆண்ட வரசுடன் வேதவனத்தில் தங்கியிருக்கும் அமயத்து மதுரையிலிருந்து பாண்டிமா தேவியாரும், குலச்சிறை நாயனாரும் ஆளுடைய பிள்ளையாரை, சமண் சமயத்தை அழிக்கும் பொருட்டு, மதுரைக்கு எழுந்தருள வேண்டும் என்னும் திருமுகங்கொடு போந்த வேவுகாரர்கள் அங்கே வந்து வேணுபுர அந்தணாளரை வணங்கி நின்றனர். திருநாவுக்கரசர், ஆளுடைய பிள்ளையாரை மதுரைக்குப் போகப்படாதென மறுத்தனர். ஞானத்தலைவர், வாகீசருக்குச் சமாதானம் சொல்லித் தமிழ் நாட்டிற்கு எழுந்தருளினர்.

## திருப்பழையாறையில் சமணர் மறைத்த சிவலிங்கப் பெருமானை வெளிப்படுத்தல்

32. வேணுபுரக்கோன் மதுரைக்கு எழுந்தருளிய பின், வாகீசர் மறைக்காட்டுப் புனிதரை வணங்கி விடை

பெற்று மீட்டும் திருவீழி மிழலையை அடைந்தனர். திருவீழி மிழலையில் சிலநாள் தங்கி, அவ்விடத்தினின்றும் அரிதி னீங்கி திருவாவடுதுறையை அடைந்து, அங்கே அமர்ந்தருளும் மாசிலாமணி யீசரை வணங்கி, அவர் ஞானசம்பந்தப் பெருமானுக்குச் செம்பொனுயிரங் கொடுத்த பெருங்கருணையை, 'கழுமலவூரர்க்கம்பொன் ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடுதுறையனுரே' என்று வியந்து போற்றிப் பிறபதிகளையும் வணங்கச் சென்று திருப்பழையாறை என்னுந்தலத்தை அடைந்தனர். அங்கே வடதளி என்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமானைச் சமணர்கள் மறைத்திருத்தலைக் கேள்வியுற்று, அந்த விமானந்தனக் கருகில் ஆங்கோரிடத்தின் பாங்கெய்தி கொன்றை முடியார் கழல் உன்னி, 'அமணர் வஞ்சனையால் மறைத்த வஞ்சம் ஒழித்தருளிப் பந்தங் கொண்ட குண்டர் திறம் பாற்றும்' என்று பணிந்திருந்தனர். மேலும், 'உம்மைக் கண்டு வணங்கி அன்றிப் போகேன்' என்று அமுது செய்யாமல் ஒரு புறத்தில் தங்கி யிருந்தனர் திருநாவுக்கரையர். அடியார் இடுக்கண் தரியாத ஆண்டகையார், மன்னவன் கனவில் தோன்றி, 'அறிவில் அமணர் நம்மை மறைப்ப இருந்தோம்' என்று அங்கு அடையாளக் குறிகள் அருளிச் செய்தருளி, 'நம்மை அரசு கும்பிடுவான் அமணர்தமை நீக்கிப் போக்கு' என்று அருள் செய்தனர். திரு ஆறை வடதளியில் எழுந்தருளிய சோமேசுவரர் கனவில் அருள் செய்ததைக் கேட்ட மன்னவன், நித்திரை தெளிந்து எழுந்து, செங்கை தலைமேற் குவித்து இறைஞ்சித் தான் கண்ட வியப்பை மந்திரிகட்கு இயம்பி அவருடன் கடிதெய்தி, அண்டர் பெருமான் அருள் செய்த அடையாளத்தின் வழிகண்டு,

குண்டர் செய்த வஞ்சனையைக் குறித்து, பெருந்தொண்டர் தம்மை அடிவணங்கித் தொக்க அமணர் தூர் அறுத்தனன். ஆனையினத்தால் துகைப்புண்ட அமண் ஆயிரம் மாய்ந்ததற் பின் அரசன் ஈசர்க்கு விமானமாக்கி, அர்ச்சனைக்கு நிபந்தம் எல்லாம் அமைத்து இறைஞ்சினன். பிறகு வாகீசர் திருக்கோயிலுட் புகுந்து இறைவனை இறைஞ்சி, 'தலையெலாம் பறிக்குஞ் சமண் கையரு ணிலையினல் மறைத்தான் மறைக்க ஒண்ணுமோ' என்னுந் திருப்பதிகத்தைப் பாடி அங்கே சிலநாள் தங்கியிருந்து ஈசர் எழுந்தருளியிருக்கும் பிறபதியும் தொழுவான் நண்ணினர்.

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையரு
ணிலையி னன்மறைத் தான்மறைக் கொண்ணுமே
யலையி னர்பொழி லாறை வடதளி
நிலையி னனடி யேநினைந் துய்மினே

செருத்த னைச்செயுஞ் சேணரக் கன்னுடல்
எருத்தி றவிர லாலிறை யூன்றிய
வருத்த னைப்பழை யாறை வடதளித்
திருத்த னைத்தொழு வார்வினை தேயுமே.

## திருப்பைஞ்ஞீலிக்குச் செல்கையில் இறைவனளித்த போதிசோறு உண்ணல்

**33.** திருவானைக்கா முதலிய தலங்களை வணங்கி, காவிரியைக் கடந்து திருப்பைஞ்ஞீலிக்குச் செல்வதற்கு எழுந்தனர் வாகீசர். திருப்பைஞ்ஞீலிக்குப் போம்பொழுது வாகீசர்க்கு, நீர்வேட்கையோடு பசியும் வந்தணைந்திட அதற்குச் சித்தம் அலையாது மேலும் மேலும் செல்வாராயினர் தாண்டகவேந்தர். பைஞ்ஞீலி-

யின்கண் எழுந்தருளிய விழியேந்திய நெற்றியினர் தொண்டர் வருத்தம் தீர்ப்பதற்குத் திருவுளம் பற்றினர். விண்ணில் மேல் தாவும் புள்ளும், மண்கிழிக்கும் தனி ஏனமும் காண்பரியவர் காவும் குளமும் உடன் அமைத்துக்காட்டி வழிபோம் கருத்தினல் மேவும் திருநீற்று அந்தணராய் விரும்பு பொதிசோறும் கொண்டு நாவின் தனிமன்னர்க்கு எதிரே நண்ணியிருந்தனர். அங்கண் இருந்த மறையவர்பால் ஆண்ட அரசு எழுந்தருளினர். எழுந்தருளிய அரசை வெங்கண்விடை வேதியர் நோக்கி 'மிகவும் வழி நடந்து இளைத்திருந்தீர். இங் கென்பால் பொதிசோறு உண்டு; இதனை உண்டு, தண்ணீர் இப்பெருங் குளத்திற் குடித்து இளைப்புப் போக்கிப் போவீர்' என்று புகன்று பொதிசோற்றை அளித்தனர். திருநாவுக்கரசர் நம்பர் திருவருள் என்று அறிந்தார்போல் மறையோர் அளித்த பொதிசோற்றை எதிர்வாங்கி இனிதாக அமுதுசெய்து இனிய தண்ணீர்ப் பருகித் தளர்வொழிந்தனர். தளர்வொழிந்து நின்ற திருநாவுக்கரசரை மறையவனர் நோக்கி, 'அப்பால் எங்குப் போவது' என்றனர். வாகீசர், 'திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்' என்றனர். மறையவரும் 'நானும் அங்கே போகின்றேன்' என்று சொல்லி அவருடன் சென்றனர். திருப்பைஞ்ஞீலியைச் சமீபித்தவுடன், உடன் வந்த மறையவனர் திருவுருக் கரந்தனர். மெய்ம்மைத் தவத்து மேலவர் 'ஆடல் புரிந்தார் அடியேனைப் பொருளா அளித்த கருணை இருந்தவாறு என்னே' என்று விழுந்து கண்ணீர் மாரி பொழிந்தனர். பிறகு, பைஞ்ஞீலியில் அமர்ந்தருளும் பரமர் கோயில் சென்று மணிகண்டர் தம்மை வணங்கி மகிழ் சிறந்து தமிழ் மாலைகள் பாடி, திருத்-

தொண்டு செய்து அத்திருப்பதியிலேயே காதலுடன் அமர்ந்திருந்தனர்.

## திருவண்ணமலை முதலிய தலங்களுக்குச் செல்லுதல்

34. பைஞ்ஞீலியை அரிதின் நீங்கி மலைநாட்டுப்பதிகள் பலவற்றையும் காதல் கூரச் சென்று இறைஞ்சி வண்தமிழ் பாடி வடபால் நோக்கி வாகீசர் திருவண்ணமலையை நண்ணினர். திருவண்ணமலையைத் தரிசித்துத் தொண்டைநாட்டிற்குச் சென்று அங்குள்ள பல திருப்பதிகளையும் வணங்கிப் பதிகம் பாடித் திருக்காளத்தி மலையை அடைந்தனர். பொன்முகலிப் புனித நெடுந் தீர்த்தத்தின் மூழ்கிக் காளத்தி மலைக் கொழுந்தைக் கண்டு இறைஞ்சிக் கண்ணப்பர் திருவடிகளைப் போற்றி அங்கேயே சில நாள் தங்கி யிருந்தனர் தாண்டக வேந்தர்.

## திருக்கைலைக்குச் செல்லல்

35. திருக்காளத்தியில் திருப்பணி செய்து, தங்கியிருக்கும் நாளில் கலைவாய்மைக் காவலனர் திருக்கைலை மலையில் சிவபெருமான் வீற்றிருந்த பெருங் கோலம் காணுமாறு காதலித்தனர். அங்கண்மாமலைமேல் மருந்தை வணங்கி அரிதின் நீங்கி கயிலை மலையைக் காணக் காதலித்து உத்தரதிசை நோக்கிச் செல்பவர் மால் வரையும், கான்யாறும், கடுங் கானகமும் கடந்து செங்கண் மால் விடையண்ணல் மேவிய திருப்பருப் பதம் நண்ணினர். வானநாடர்கள், சித்தர்கள், இயக்கர்கள், ஞானமோனிகள் முதலியோர் நாளும் நம்பரை வந்து இறைஞ்சி நலம் பெறுதற்குரிய தானமாகிய அத் திருச்சிலம்பை வணங்கி

வண்டமிழ் சாற்றினார் வாகீசர். திருப்பருப்பதத்தை நீங்கிக் கைலையங்கிரியைக் காண்பதே கருத்துடையராய்த் தெலுங்கு நாட்டைக் கடந்து, கன்னட தேசம் எய்தினார். கன்னட தேயத்தை விடுத்து, பல நதித்துறைகளையும், மலைப் பிரதேசங்களையும் தாண்டி மாளவதேயத்தை நண்ணினார். அந் நாட்டினின்றும் அகன்று அருஞ் சுரங்கள் கடந்து போய் இலாட பூமியை இகந்து, வெற்பினொடு வனங்களையும் ஆறுசுனைகளையும் கடந்து மத்திய பைதிரத்தினை எய்தினார். அந்த நாட்டைக் கடந்து கங்கை யாற்றை யணைந்து சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் வாரணாசியை விருப்பினொடு பணிந்து, தம்முடன் அணைந்தவர்களை அந்நகரத்தில் விட்டு அகன்று, நாவின் மன்னர் கற்சுரங்களை அடைந்தனர். கைலையங்கிரியை அடைய வேண்டும் என்னும் காதல் மீக்கூர்தலின், நாவின் மன்னர், சாகமூலபலங்கள் துய்த்தலையும் விட்டு பெருங் காட்டினையும், மனிதர்கள் செல்லுதற்கரிய நெறியினையும் கடந்து இராக்காலத்தும் போதலைத் தவிராமல் நேரே சென்றனர். இருட்டின் கண்ணே செல்லும் அன்பர்தம்மைத் தீய விலங்குகளும் தீண்டவும் நெருங்கவும் அஞ்சின. நச்சுக்கால் வாயினையுடைய நாகங்கள் தங்கள் மகுடத்திலுள்ள மாணிக்க விளக்குகளைத் தூக்கின. இவ்வாறு தேவர்களும் தனியே செல்லுதற்கு அஞ்சும் அருஞ்சுரத்தை அடைந்தனர் வாகீசர். இரவும், பகலும் தவிராமல் அருஞ்சுரத்தில் நடந்து செல்லும் வாகீசப் பெருந்தகைக்குக் கால்களிலுள்ள தசை பரட்டளவும் தேய்ந்தது. அவ்வாறு தேய்தலுற்றும் வெள்ளிமால் வரையில் வீற்றிருக்கும் மங்கைபாகரைக் காணும் பெருவிருப்புக் குறைவுறாமையின் இரண்டு கரங்களினால் தாவிச் செல்ல லுற்-

றனர். கைகளும் மணிக்கட்டும் இளகிக் கரைந்து தேய்ந்தன. மைகொள் கண்டர்தம் அன்பர் சிந்தையின் விருப்பு மீமிசைப் பொங்கிட் பரற்கள் நெருங்கிய பாலை-வனத்தில் தம் மார்பினுல் நகர்ந்து சென்றனர். மார்ப-மும் தசை நைந்து சிந்தி என்பும் முரிந்திடவும் கைலை-யைக் காணும் பெரு விருப்பு மேன்மேல் எழ வாகீசர் அப் பாலைவனத்தில் புரண்டு புரண்டு சென்றனர். அவ்-வாறு புரண்டு செல்வதனுல் திருமேனியின்கண் உள்ள உறுப்பு முழுவதும் அழியப் பின்பு மெல்ல நகர்ந்து செல்லும் முயற்சியும் அற்று வழியின் ஒரு புறத்தில் செயலின்றி இருந்தனர் தமிழாளியார். அப்போது பன்னகம்புனை பரமர், வாகீசர் திருக்கயிலையை அணை-வதற்கு அருளாதவராய் இப்பூவுலகில் ஆன்மாக்கள் உய்வதற்காக அவரைக்கொண்டு தமிழ்ப் பதிகம் பாடு-வித்தற் பொருட்டு அங்கு ஒரு நறும்புனற்றடம் உண்டாக்கி, முனிவர் வடிவங் தாங்கி எழுந்தருளி, நாவுக்கரசர் செயலற்றுக் கிடக்கும் இடத்தை அணுகி அவர் மருங்கிற் சென்று நேர் நின்று அருளோடு அவரை நோக்கி, 'உறுப்புக்கள் எல்லாம் சிதைந்து அழிய நீர் இப் பாலைவனத்தை அடைந்த காரணம் என்?' என்று வினவினர். அப்பொழுது மாசில் வற்கலை யாடையும், மார்பின் முந்நூலும், தேசு-டைச் சடை மவுலியும், மெய்யிற் றிகழும் திருநீறும் விளங்கும் ஆசில் மெய்த்தவரை எதிர் நோக்கிய மாத்-திரையில், நாவின் மன்னர்க்குப் பேசுதற்கு உணர்வு உண்டாகி மறுமொழி கூறுவாராயினர். 'முனிவரரே, வண்டு வார்குழல் மலைமகளுடன் வடகயிலையில் அண்டர் நாயகர் இருக்கும் அப்பரிசு அடியேன் கண்டு கும்பிட எழுந்த காதலால் இங்கு அடைந்தேன்; இதுவே என்

குறிப்பு' என்றனர். வாகீசர் மொழிந்ததனைக் கேட்ட முனிவர் பெருமானும், 'கயிலைமால் வரை, காசினி மருங்கு பயிலும் மானிடப் பான்மையோர் அடைவ- தற்கு எளிதோ? அயில்கொள் வேற்படை யமாரும் அணுகுதற்கு அரிதாம் தன்மையுடையது. ஆதலின் நீர் வெயில் கொள் வெஞ்சுரத்து வந்து என் செய்தீர்? நீர் வந்த வழியே மீண்டு செய்வதே உமக்கு இனிக் கடனா- கும்' என்றனர். திருநாவுக்கரையர், 'ஆளுநாயகன் கயிலையின் இருக்கை கண்டல்லது மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்' என மறுத்தனர். அதைக்கேட்ட முனிவரர் விசும்பிடைக் கரந்து, அசரீரிவாக்கால் 'ஓங்கு நாவுக்கரசனே எழுந்திரு' என்று உரைத்தனர். வாகீ- சர் தீங்கு நீங்கிய யாக்கையராய் ஒளி திகழ எழுந்து,

அண்ண லேயெனை யாண்டுகொண் டருளிய வமுதே
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே
கண்ணி னற்றிருக் கயிலையி லிருந்தநின் கோலம்
நண்ணி நான்றொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார்.

பணிந்த நற்றொண்டரை நோக்கி இறையவர் விண்- தலத்தினில் எழுபெருந் திருவாக்கினால், 'நீ இப்பொய்- கையில் மூழ்கி நாம் கைலையிலிருந்த அம் முறைமையை திருவையாற்றிற் காண்' எனப் பணித்தனர்.

## திருவையாற்றில் திருக்கைலையிலிருந்த கோலங் காண்டல்

36. இறைவன் அசரீரியாற் பணித்தமையைக் கேட்ட வாக்கின் மன்னவர் அவ்வருண் மொழியைத் தலைமேற் கொண்டு அஞ்செழுத் தோதி தடம் புனற்- பொய்கையில் மூழ்கினர். போதமாதவர் பனிமலர் பொய்கையின் மூழ்கி திருவையாற்றின்கண் உள்ள ஒரு

வாவியின் மீது உலகெலாம் வியப்பத் தோன்றினர். வம்புலா மலர் வாவியின் கரையின் வந்தேறி, உம்பர் நாயகர் திருவருட் பெருமையை உணர்ந்து, 'ஏழையே-னாகிய என்பால் எம்பிரான் பெருங் கருணை இருந்த-வாறு என்னே!' என்று வியந்து கொண்டாடி, இரு கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் பொழிய மீட்டும் வாவியில் மூழ்கி எழுந்த தன்மையராயினர். ஐயா-றுடைய நாயக ர்சேவடி பணிந்து அத் தலத்திலுள்ள சராசரங்கள் எல்லாம் தங்கள் தங்கள் துணையோடும் பொலிதலைக் கண்டு அவைகளைச் சிவமும் சத்தியுமாகப் பாவித்து வணங்கி ஆலயத்துக்கு முன்னே சென்றனர். அவ் வாலயமே திருக்கைலாசகிரியாகத் தோன்றியது. இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாம் அன்போடு போற்றித் துதிக்கும் ஒலியுடன் வேத முழக்கம் ஓர்பால் முழங்கிற்று. தேவர், தானவர், சித்தர், விச்சாதரர், இயக்கர், மாதவர், முனிவர் ஒரு புடை நெருங்கி-யிருந்தனர். அரம்பையர் கீத ஒலியும் மத்தள ஓசையும் ஏழ்கடல் முழக்கினும் பெருகி ஒருபால் முழங்கின. கங்கை முதலிய கடவுண்மாநதிகள் புனல்பெருந் தட-மாகிய உருக்கொடு வணங்கா நின்றன. கணநாதர்கள் ஒரு புறம் இறைஞ்சி நின்றனர். பூதவேதாளங்கள் வாத்திய ஒலியுடன் ஒருபால் போற்றிநின்றன. அணைந்-தோர் யாவரும் வெள்ளி மால்வரை இரண்டென ஐயு-றும் வகை செங்கண்மால் விடை எதிர் நிற்கவும் நந்தி-யெம்பெருமானாகிய மற்றொரு விடை கண்ணுடி முன் நணுகியது. இஃதெல்லாம் இவ்வாறு பொலிவெய்த வெள்ளி வெற்பின்மீது மாரகதக் கொடியுடன் பவள வெற்பென்னலாம்படி இடப் பாகங் கொண்ட மாமலையா ளுடன் வீற்றிருந்த தடங்கருணைப் பெருங் கடலாகிய

பரமசிவனை வாக்கின் மன்னவனார் கண்டனர். கண்டு ஆனந்தக் கடலினைக் கண்களால் முகந்துகொண்டு வாகீசர் கைகுவித்து, எதிர்விழுந்து எழுந்து, அண்டர் நாயகர் முன்பு நின்று ஆடினார் பாடினார் அழுதார். தொண்டர்க்கு அங்கு நிகழ்ந்தவைகளை யார் சொல வல்லவர்! சீகண்ட பரமசிவன் திருக்கயிலையில் எழுந்தருளி யிருக்கும் தனிப்பெருங் கோலத்தைக் கண்டு, அவர் திருவருளால் விளைந்த சிவானந்தப் பேரமுதை உண்டு களிக்கும் பெரும் பேற்றை எய்திய தாண்டகவேந்தர் பற்பல திருத்தாண்டகங்கள் பாடிப் பரமபதியைத் துதித்தனர். இவ்வாறு இறைவனை வாழ்த்தித் தாம் கண்ட கோலமாகிய ஆனந்தப் பெருங்கடலில் அமிழ்ந்திருக்கும் வாக்கின் வேந்தர்க்கு திருவையாறமர்ந்த அழகர் தாம் காட்டிய தனிப்பெருங் கோலத்தை மறைத்தருளினார். சிவபெருமான் கயிலையில் வீற்றிருக்குங் கோலத்தைக் காட்டி மறைத்த அளவில் நாவுக்கரையர், 'செய்ய வேணியர் திருவருள் இதுவோ' எனத் தெளிந்து, தாம் கண்ட அருட்பெருங் கோலத்தின் திறத்தை, வையம் உய்ந்திட, 'மாதர் பிறைக் கண்ணியானை' என்னும் திருப்பதிகத்தாற் பாடியருளினார்.

மாதர் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாம லையா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்

வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததோர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றே

னளவுப டாததொ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.

இன்னும் பற்பல திருத்தாண்டகங்கள், குறுந்தொகைகள், நேரிசைகள் முதலியன பாடி, திருத்தொண்டு செய்துகொண்டு திருவையாற்றின்கண் அமர்ந்தனர். திருவையாற்றில் அமர்ந்திருக்குங்காலையில் திருநெய்த்தானம் திருமழபாடி முதலிய தலங்கட்குப் போய் பணிசெய்து, திருப்பதிகம் பாடி திருப்பூந்துருத்தியைச் சார்ந்தனர் வாகீசர். திருப்பூந்துருத்தி போந்த வாக்கின் வேந்தர், இறைவன் வீற்றிருக்கும் திருநெடுமாளிகை முன்னர்ச் சார்ந்து வலங் கொண்டு இறைஞ்சி, நம்பெருமான் திருமுன்பு தாழ்ந்து எழுந்து பற்பல திருப்பதிகங்கள் பாடி யருளினர். அத் திருப்பூந்துருத்தியிலே சிலநாள் தங்க வேண்டி அங்கே ஒரு திருமடம் சமைத்து அத் திருப்பதியின்கண்ணே எழுந்தருளி யிருந்தனர்.

## திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளும் ஞானசம்பந்தப்பெருமானை அப்பர் எதிர்கோள்ளல்

37. பாண்டிமாதேவியார் வேண்டுகோட் கிணங்கி மதுரையம்பதிக்குச்சென்ற சிரபுரத்துச்செல்வர் கடம்பமா வனத்தை மூடியிருந்த ஊனமாகிய சமணக்கொடிகளை அறுத்து வீசி, தென்னவன் கூனை நிமிர்த்தருளி, மதுரையம்பதி எங்கும் திருநீற்றினொளி விளங்கக்கண்டு சோணாட்டை நோக்கிவருவா ராயினர். பொன்னி வளந்தரு நாட்டை அடைந்த சண்பைவரு விரகர் திருப்பூந்துருத்தியில் வாக்கினுக்கு வேந்தர் இருந்தமையைக் கேட்டுப் பூந்துருத்தி வளம்பதியின் புறம்பணையில் வந்-

தணைந்தனர். மண் பரவும் பெருங்கீர்த்தி வாகிசர், சண்பைவருந் தமிழ் விரகர் எழுந்தருளுவதைக் கேட்டு அவரைக் கண்டு இறைஞ்சும் காதலினால், விருப்பெய்த எழுந்தருளி எதிர் சென்றனர். காழியர்கோன் வரும் எல்லையில் கலந்து அடியார்கள் நடுவண் புகுந்து நெருக்கினால் யாவரும் காணாமே தொழுதருளி, ஞானசம்பந்தப் பெருமான் எழுந்தருளிவரும் மணிமுத்தின் சிவிகையினை, 'தாழும் உடல் இது கொண்டு தாங்குவன் யான்' எனத் தாங்கி மகிழ் வெய்தினர். எதிர்கொண்டு வந்து எவரும் அறியா வண்ணம் மறைந்த வடிவத்துடன் புகலி அந்தணனார் எழுந்தருளி வரும், மணிமுத்தின் சிவிகையினைத் தாங்குவாருடன் தாங்கி சிந்தை களிப்புற வரும் வாகீசப் பெருமானை யாவரும் தெளிந்திலர். திருஞான மாமுனிவர் திருநாவுக்கரசர் தங்கி யிருந்த பூந்தருத்திக்கு அருகே எழுந்தருளி, 'எங்குற்றார் அப்பர்?' என்று வினவினர். அப்பர், 'உருகாநின்று உம்மடியேன் உம்மடிகள் தாங்கி வரும் பெரு வாழ்வு பெற்று இங்குஉற்றேன்' என்றனர். பிள்ளையார் அது கேட்டுப் பெருகு விரைவுடன் சிவிகையினின்றும் இழிந்து உள்ளமிகு பதைப்பெய்தி உடைய அரசினை வணங்க, வள்ளலார் வாகீசர் அவர் வணங்காமுன் வணங்க துள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாம் தொழுது ஆர்த்தனர். கழுமலக்கோனும் திருநாவுக்கரசருடன் கலந்தருளி பூந்தருத்தியில் மேய மழுவினொடு மானேந்து திருக்கரத்தார் மலர்த் தாள்கள் தொழுது உருகி யின்புற்றுத் துதிசெய்து அங்குச் சிலநாள் அமர்ந்திருந்தனர். பிரமபுரத் திருமுனிவர் தொண்டை நன்னாட்டின்கண் உள்ள அரன் மகிழுந் தானங்கள் அணைந்து இறைஞ்சிப் பாடுவதற்குப் பூந்தருத்தி தொழுது அணைந்தனர்.

## பாண்டி நாட்டிற்குச் செல்லுதல்

38. பாண்டி நாட்டின்கண் உள்ள அரன் மகிழுந் தானங்கள் அணைந்து இறைஞ்சிப் பாடுவான் எழுந்த பெருவிருப்பால் பூந்துருத்தியினின்றும் அரிதின் நீங்கி தென்திசை நோக்கிச் சென்று திருப்புத்தூர் பணிந்து ஏத்தி திருவாலவாய் சார்ந்தனர் தாண்டக வேந்தர். ஆண்ட அரசர் மதுரையம் பதியை அணைந்து திருந்திய நூற் சங்கத்துள் அன்று இருந்து தமிழாராய்ந்தருளிய அங்கணர்கோயில் வலங்கொண்டு இறைஞ்சி உள்புக்கு மால்விடையாரை வணங்கி மகிழ்ச்சியுட் டிளைத்தனர். கூன்பாண்டியன், பாண்டிமாதேவியார், பார்பரவும் குலச்சிறையார் வாகீசர்தமைப் பணிந்து போற்றிட அடங்காத காதலால் திருவாலவாயின்கண் சிலநாள் தங்கியிருந்தனர். திருவாலவாயினின்றும் நீங்கி, திருப்பூவணத்தை அடைந்து தரிசித்துப் பிறபதியும் தொழப் புக்கனர். தென்னிலங்கை இராவணன்தன் சிரம் ஈரைந்தும் துணித்த மன்னவனாகும் இராமனுக்குப் பெரும் பாதகம் தீர்க்கும் பிஞ்ஞகரைத் தொழ நினைந்து எழுந்தனர் வாகீசர். திருவிராமேச்சுரத்து மேவிய சங்கரனை நேர்நின்று தொழுது திருத்தொண்டு நலம் பெருகச்செய்து அங்கேஅமர்ந்தனர் வாகீசர். அவ்விடத்தினின்று கண்ணுதலார் அருள்சூடி அகன்று திருநெல்வேலி முதலிய பதிகளை வணங்கி வண்தமிழ் பாடி வழுவில் திருப்பணி செய்து மனங்கசிவுற்று எப்பொழுதும் ஒழுகிய கண்புனலும், ஓபாது சிவன் தாள்கள் தழுவிய சிந்தையில் உணர்வும் தங்கியவராய் சரித்தனர் வாக்கின் மன்னர். பொய்ப்பாசம் போக்குவார் தேம்பொழியும் செந்தமிழ் நாட்டினில் எங்கும் சென்றிறைஞ்சிப் பாம்பணி-

வார் தமைப் பணிந்து, பொன்னிநாட்டை அடைந்து பூம்புகலூரைச் சார்ந்தனர்.

## திருப்புகலூர்க்கு மீட்டும் வருதல்

39. பொய்கைசூழ் பூம்புகலூர் புனிதர் மலர்த்தாள் வணங்கி நையுமனப் பரிவோடு நாடோறும் திருமுன்றிலில், கைகலந்த திருத்தொண்டு செய்து, பெருங்காதலுடன் அங்கு வைகி, எண்ணிறந்த தமிழ் மாலைகள் பாடி, மகிழ்வுற்றனர்.

## நவமணிகளை வெறுத்தல்

40. திருப்புகலூரில் உழவாரத் திருத்தொண்டு செய்து அபருநாளில், அவருடைய நன்னிலைமையை உலகத்தார் அறியக் காட்டுவான் வேண்டி, பன்னகாபரணர் உழவாரப் படை நுழைந்த இடமெல்லாம் பொன்னினெடு நவமணிகள் பொலிந்து இலங்க அருள் செய்தனர். செம்பொன்னும் நவமணியும் சேண்விளங்க, அவைகளை உம்பர்பிரான் திருமுன்றில் உருள் பருக்கையுடன் ஒக்க வாகீசர் உழவாரத்தினில் ஏந்தி பூங்கமல வாவியினிற் புகும்படி எறிந்தனர்.

## மடவாரை வெறுத்தல்

41. புல்லோடும் கல்லோடும் பொன்னோடும் மணியோடும் வேறுபாடிலா நிலைமையையுடைய நல்லோர்முன், திருப்புகலூர் நாயனர் திருவருளால் விசும்பினின்றும் அரம்பை மாதர்கள் வந்து இழிந்தனர். வானகத்தினின்றும் வந்து இழிந்த மடவார் திருநாவுக்கரையரைத் தம் வசப்படுத்தப் பலவாறு முயன்றனர். அத்தனர் திருவடிக்கீழ் நினை வகலா அன்புருகும் மெய்த்தன்மை

உணர்வுடைய விழுத்தவத்து மேலோர், 'பொய்ம் மாயப் பெருங்கடலுட் புலம்பாநின்ற புண்ணியங்காள்' என்னும் திருப்பதிகத்தினைப் பாடி சித்தநிலை திரியாது தாம் செய்பணியின்றலை நின்றார். அரம்பையர்கள் தாம் கொண்ட எண்ணம் நிறைவேறாமையின் வாக்கின் மன்னரை இறைஞ்சி அகன்றனர். ஏழுலகத்தில் உள்ளவர்களும் வாகீசர் திருத்தொண்டின் திறத்தை வியந்து ஏத்தப் புகலூரில் அமர்ந்திருந்தனர்.

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்கு
இல்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே

சுருக்கமொடு பெருக்கநிலை நீத்தல் பற்றித்
துப்பறையென் றனைவீரிவ் வுலகை யோடிச்
செருக்கிமிகை செலுத்தியும செய்கை வைகல்
செய்கின்றீர்க் கமையாதே யானேன் மிக்க
தருக்கிமிக வரையெடுத்த வரக்க னாகந்
தளரவடி யெடுத்தவன்றன் பாடல் கேட்டு
விரக்கமெழுந் தருளியவெம் பெருமான் பாதத்
திடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே

## சிவத்தோடு கலத்தல்

42. புகலூரர் என்னையினிச் சேவடிக்கீழ் இருத்துமென்று எழுகின்ற உணர்வின் முயற்சியினால் திருவிருத்தம் பலமொழிந்து, சித்திரை மாதச் சதயமாந் திருநாளில், ஆண்ட அரசு,

மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே னெனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீ ழாண்டவா செய்தினர்.

வாக்கின்றனி மன்னர் புகலூரார் திருவடி நிழல் எய்திய அற்புதத்தினைக் கண்ட வானவர்கள் மலர் மாரியை மண்ணிறையப் பண்ணினர். விரிஞ்சன் முதலாயினோர் உண்ணிறைந்த பெருமகிழ்ச்சி எய்தினர்.

எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனே
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லாற்
கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன்
கழலடியே கைதொழுது காணி னல்லால்
ஒண்ணுளே யொன்பது வாசல் வைத்தாய்
ஒக்க வடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா வுன்னடிக்கே போது கின்றேன்
பூம் புகலூர் மேவிய புண்ணியனே

ஒருவனையு மல்லா துணரா துள்ளம்
உணர்ச்சித் தடமோற்றத் துள்ளே நின்ற
இருவரையு மூவரையு மென்மே லேவி
இல்லாத தரவறுத்தாய்க் கில்லே னேலக்
கருவரைசூழ் கான விலங்கை வேந்தன்
கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையா யுன்னடிக்கே போது கின்றேன்
பூம் புகலூர் மேவிய புண்ணியனே

---

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெ லாம்அர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்



திருச்சிற்றம்பலம்

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய
நலம்பொல்லே னன்பொல்லேன் ஞானியல்லேன்
நல்லாரோ டிசைந்திலே னடுவேநின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேசவல்லேன்
இலம்பொல்லே னிரப்பதே யீயமாட்டே
னென்செய்வான் ரேன்றினே னேழையேனே

திருச்சிற்றம்பலம்

Printed at the "Aurora Press," Madras — 1926.